# மருது பாண்டியர்

(நாடகம்)

ஏ. பி. நாகராஜன்.

தாமரைக் கண்ணன்

அஸோஸியேஷன் பப்ளிஷிங் ஹௌஸ்

94–95, புதுத்தெரு, மண்ணடி, சென்னை–1

 1963 [விலை ரூ. 2

முதற் பதிப்பு : பிப்ரவரி 1963

## நன்றி......!

மறைந்து கிடந்த வரலாற்றுக் குறிப்புக்களை ஒன்று திரட்டி, '**மருது சகோதரர்களை**' நாட்டுக்கு அறிமுகப் படுத்திய வரலாற்று அறிஞர்களில் முதல் இடம் வகிக்கும் பேராசிரியர் திருமிகு **ந. சஞ்சீவி எம். ஏ.** அவர்கட்கு இதயங் கனிந்த நன்றி உரித்தாகின்றது!

**தாமரைக்கண்ணன்.**

Venkatesan Press, Madras—1.

# வாழிய பாரத மணித் திருநாடு...!

பாரத நாடு நம் நாடு...!

நம் நாடு வீரம் செறிந்த நன்னாடு; புனிதம் நிறைந்த பொன்னாடு!

நமக்கே உரிமையான பழமையிலும் பழமை மிகுந்த நாகரிகமும், புதுமையிலும் புதுமை மிளிரும் பண்பாடும் ஒன்றாக இணைந்து விண்ணோடும் முகிலோடும் விளையாடி உலக அரங்கிற்கும் அப்பால் மணம் கமழ்ந்து நமக்குப் பெருமை சேர்க்கின்றன!

இந்தியத் துணைக்கண்டத்தின் தென்கோடியில் வரலாற்றுக் காலத்திற்கு முன்பிருந்தே வேற்று நாட்டினர் வந்து வாணிபம் செய்துகொண்டிருந்தனர். அப்படி வழிவழியாக வந்த வணிகரில் இறுதி இனத்தார், ஆங்கிலேயர்...!

வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட செந்தமிழ் நாட்டில்தான், வெள்ளை வணிகரால் முதன் முதலாக பாரதத்தாயின் கால்களுக்கு அடிமைத்தளை இறுகப் பூட்டப்பட்டது.

அந்த நேரத்தில் வீறுகொண்டு எழுந்து வெள்ளையரின் ஆதிக்கத்தை எதிர்த்து வீரமரணம் அடைந்த தமிழ் மறவர் எண்ணிலடங்கார்.

சுதந்திர வாழ்வுக்காகவும் தன்மானத்திற்காகவும் போரிட்டுப் பொன்றாப் புகழ் எய்திய வீரத் தமிழர்களான **பெரிய மருது...சின்ன மருது** ஆகிய இருவரது வாழ்க்கை வரலாறு இங்கே நாடகவடிவில் சுவையுடன் தரப்படுகிறது.

வீரர்களின் வரலாற்றினைப் படிக்கும்போதும் நடிக்கும்போதும் நாம் நம்முடைய பண்டைப் பெருமையை உணர்கிறோம்; புதியதோர் சக்தியும் உற்சாகமும் பெறுகிறோம். புனிதம்

நிரம்பிய இந்திய மண்ணில் பிறந்த ஒவ்வொருவர்க்கும் அத்தகைய உணர்வும் சக்தியும் உற்சாகமும் இன்றைய நிலையில் அதிகம் தேவை. அந்தத் தேவையை இந்த நாடகம் ஓரளவு நிறைவு செய்யும் என்பது என் நம்பிக்கை!

மதிப்பிற்குரிய '(அஸோஸியேஷன் பப்ளிஷிங் ஹௌஸ்' உரிமையாளர் திருமிகு பி. வீரராகவன் அவர்கள் காலம் அறிந்து இந்நூலைக் கொணர்ந்திருக்கிறார்கள்; நான் கருத்து அறிந்து அவர்க்கு என்றும் கடமைப்பட்டிருக்கிறேன்!

கொங்கரை,
ஒரத்தி அஞ்சல்,
(மதுராந்தகம் வட்டம்)
8-2-1963

அன்பின்,

தாமரைக்கண்ணன்

“ஈட்டிகளைத் தீட்டிக் கொள்ளுங்கள், மருது சகோதரர்களே! அவை நம் பகைவர்களின் மார்பில் எட்டின மட்டும் பாயட்டும்...!

“வேல் எங்கே...? கொடியவர் செயலை வேரோடு அறுக்கும் கூர் வாள் எங்கே...? வில் எங்கே...? வஞ்சகர்களின் நெஞ்சத்தைப் பிளந்தெடுக்கும் வலிய அம்பு எங்கே...? எல்லாவற்றையும் எடுத்துக் கொள்ளுங்கள்...!

“இப்போதே கிளம்புங்கள்! போருக்கு, வீரத்திற்குப் பேர்போன ஆண்கள் வரட்டும்! ஆண்மை நிறைந்த பெண்கள் வரட்டும்! பெரியவர்கள்... சிறியவர்கள்... தன்மானம் உள்ள செல்வங்கள் எல்லாருமே வரட்டும்...!

“வீழ்த்துவோம் விரோதிகளை! வாழ்த்துவோம் தாயகத்தை...!!”

— வேலு நாச்சியார்.

# உள்ளே.........!

பெரிய மருது
சின்ன மருது } ............... சிவகெங்கை ஜமீனைச் சேர்ந்தவர்கள்

முத்து வடுகநாத உடையணத் தேவர்.......சிவகெங்கை அரசர்

வேலு நாச்சியார்..............சிவகெங்கை அரசி

புதுக்கோட்டைத் தொண்டைமான்..........புதுக்கோட்டை மன்னன்

முத்தய்யன்......................உண்மைத் தொண்டன்

முனியம்மா.....................முத்தய்யன் மனைவி

கறுத்தான்.......................தொண்டைமான் கையாள்

கண்ணம்மா...................கறுத்தான் மனைவி

கர்னல் வெல்ஷ்
கர்னல் அக்நியு
கர்னல் பிளாக்பர்ன் } ......வெள்ளைத் தளபதிகள்

படமாத்தூர் தேவர்...........சிவகெங்கையின் புதிய அரசன்

மற்றும்

ஆர்க்காட்டு நவாப், ஹைதர் அலி, குண்டான் குறுணி முதலியோர்.

# மருது பாண்டியர்

## (நாடகம்)

### காட்சி 1

சிவகங்கை
அரச அவை

[அரியணையில் அரசன் முத்துவடுகநாத உடையணத் தேவனும், அரசி வேலுநாச்சியம்மையும் அமர்ந்துள்ளனர். சூழ்ந்துள்ள இருக்கைகளில் அமைச்சர், மருது சகோதரர்கள், மறவர் பெருமக்கள் முதலியோர்.]

**முத்துவடுக நாதன் :—**(எழுந்து) உழுவலன்புடைய பெரியோர்களே! மறவர்குலப் பெருமக்களே! எங்கள் அழைப்பிற்கு இணங்கி நீங்களனைவரும் வருகை புரிந்து இருக்கிறீர்கள். உங்கள் நல் வருகையால் எங்கள் உள்ளம் பூரிப்படைகிறது. உங்களை 'வருக...வருக' என்று அன்பு கனிந்த இதயத்தோடு வரவேற்கிறேன். நீங்கள் பல்லாண்டு 'வாழ்க... வாழ்க' என்று அருள் நிறைந்த உள்ளத்தோடு வாழ்த்து கிறேன்.

செந்தமிழ் நாட்டுச் செல்வர்களே! இதயத்தைக் கவர்ந்திழுக்கும் இன்றைய எல்லா நிகழ்ச்சிகளிலும் பங்குகொண்டு எங்களை மகிழ்வியுங்கள். அதுவே எங்கள் வேண்டுகோள்.

மறவர் குல திலகங்களே! வருக... வருக... வருக! வாழ்க... வாழ்க... வாழ்க!!

[அமர்கிறான். அவைக்குத் தலைவியாக விளங்கும் அரசி வேலு நாச்சியார் எழு கிறாள்.]

**வேலு நாச்சியார் :**—(கைகூப்பி) இன்றைய அவை முப் பெரும் வீரர்களைச் சிறப்பிக்கவேண்டி கூட்டப்பட் டிருக்கிறது. அரசருக்கு உயிராகவும் உடலாகவும் இருந்து ஆட்சியைக் கவனித்து வரும் பெரிய மருது என்றழைக்கப்படும் வெள்ளை மருது... அவர் இள வல் சின்னமருது... ஆகிய இருவரையும் பாராட்டு வதற்காக நாம் இங்கே கூடியிருக்கிறோம்.

நிகழ்ச்சி நிரலில் கண்டவாறு இப்போது வீரத்தை வெளிப்படுத்தும் கூத்து ஆடப்படும்.

[அமர்கிறாள். ஆடவரும் பெண்டிரும் சேர்ந்து ஆடுகின்றனர். முடிந்ததும்...]

**வேலுநாச்சி :**—(எழுந்து) அடுத்தபடி 'வீரர்களுக்குப் பரிசு வழங்குதல்.'

முதற்கண் பெரிய மருதுவைப் பற்றிச் சில வார்த்தைகள். அவர் வீரத்தின் விளைநிலம்... உண் மையின் நிலைக்களன்... வெற்றிச் செல்வியின் இருப் பிடம்...! மண்ணினை அளந்து மாலென வளர்ந்து நிற்கும் தோற்றம் உடையவர். மலையையும் தகர்க் கும் ஆற்றல் படைத்தவர். நமது தென்பாண்டி நாட்டின் தனிக்காட்டு ராஜா அவர்.

நேற்றைய தினம் நாங்கள் வேட்டையாடச் சென்றபோது, பாய்ந்துவந்த வேங்கையைக் கொன்று அரசரைக் காப்பாற்றினர், அவர். சீறி வரும் வேங்கைகளோடு சிரித்துக்கொண்டு விளை யாடுவது அவருடைய வழக்கம். ஆனாலும், அரச ருடைய உயிரைக் காப்பாற்றினர் என்பதற்காக அவரைப் பாராட்டி, இந்தக் கேடயத்தையும் ஈட்டி யையும் அன்பளிப்பாக அளிக்கிறேன்.

[மாலை யணிவித்துப் பரிசைத் தருகிருள். வணங்கிப் பெற்றுக்கொண்ட பின்னர்...]

**பெரிய மருது :**—என் தொண்டு அரசருக்கு எப்போதும் உண்டு. அரசியாரின் பாராட்டுதலுக்கு நன்றி செலுத்திக்கொள்ளும் முகத்தானுக, நேற்று நான் போரிட்டு வீழ்த்திய புலியின் பற்களை அரசியாருக் கும், அந்த வேங்கையின் அழகுத் தோலை மதிப்பிற் குரிய அரசருக்கும் கொடுக்கிறேன்! வணக்கம்.

[கொடுத்துவிட்டு அமர்கிருன்.]

**வேலு நாச்சி :**—நாடு வாழவேண்டும்... அத்துடன் நாமும் வாழ வேண்டும் என்ற உயர்ந்த நோக்க முடைய சிறந்த வீரர், சின்ன மருது. ஈதலும் இசைபட வாழ்தலும் அவர் குறிக்கோள். பகை வருக்கும் அன்பைத் தரும் பண்பு... மனத்தில் தூய் மையும், மொழியில் வாய்மையும் உடையவர். நினைத்ததை முடித்து நிற்கும் ஆற்றல் படைத்தவர். அவர் எனக்கு வேற்பயிற்சியும், விற்பயிற்சியும் அளித்து, என்னை ஓர் வீராங்கனையாக்கினர். நான்

இந்தச் சிவகங்கைச் சீமையின் அரசி என்றாலும், அவருடைய மாணாக்கி. எனவே, என் குரு காணிக்கையாக அவருக்கு இந்த வளரித் தடியையும், கதையையும் அளித்துப் போற்றுகிறேன். இவற்றை ஏற்றுக் கொள்ளுமாறு அவரை வேண்டுகிறேன்.

[பூமாலை போட்டுப் பாராட்டுப் பொருளைத் தருகிறாள். அவற்றை ஏற்ற...]

**சின்ன மருது** :—பூமாலை போட்டுப் புகழ்மாலை சூட்டியதற்கு என் அன்பு கலந்த நன்றி. அதன் அடையாளமாக, நாட்டின் முதுகெலும்புகளான நாலாயிரம் மறவர்குல இளைஞர்களுக்குப் போர்ப் பயிற்சி அளிக்கும் பணியை இன்றே துவக்குகிறேன். அரசர் அனுமதி தருவார் எனவும் நம்புகிறேன். வணக்கம்.

[அமர்கிறான்.]

**வேலு நாச்சி** :—மருதேந்திரர் இருவருக்கும் காளையார் கோயில் கோபுர வாயிலில் சிலை அமைக்க எண்ணுகிறேன். கறுத்தான் என்னும் நம் தோழன் ஒரு வலைஞனாக இருந்தாலும் சிறந்த வீரன். நேற்றைய தினம் பெரிய கரடி ஒன்றைச் சுட்டு வீழ்த்தினான். எனவே, இராஜ விசுவாசம் மிகுந்த அவனுக்கும், கரடியைக் கையில் வைத்திருக்கும் நிலையிலேயே ஒரு சிலை அமைக்க முடிவு செய்துள்ளோம். சிலை அமைக்கும் பணி இன்றுமுதல் துவங்கும். முப்பெரும் வீரர்களின் சிலையும் காளையார் கோவில் கோபுர வாயிலில் துலங்கும். வணக்கம்.

[கறுத்தான் எழுந்து வணங்குகிறான். அவை கலைகிறது.]

— **திரை** —

## காட்சி 2

சிறுவயல்
சின்ன மருது அரண்மனை

[சின்ன மருது நம்பியர்க்கும், நங்கையர்க்கும் போர்ப் பயிற்சியளித்துக்கொண்டிருக்கிறான். மருதுவின் ஆட்களான முத்தையனும், கறுத்தானும் உடன் உள்ளனர். மதுரையில் இருக்கும் வெள்ளை சுபேதார் வெல்ஷ் வருகிறான்.]

**வெல்ஷ் :**—குட் மார்னிங், பிரபு !

**சி. மருது :**—ஓ... சுபேதார் வெல்ஷ் துரையா ? வாருங்கள் தோழரே ! மதுரையிலிருந்துதானே வருகிறீர்கள் ?

**வெல்ஷ் :**—ஆமாம். பிரபுவைப் பார்ப்பதற்காகவே வந்தேன். பார்த்து அதிக நாட்கள் ஆகிவிட்டன அல்லவா ?

[இருவரும் தழுவிக்கொண்டு உட்காருகின்றனர்.]

**சி. மருது :**—முத்தய்யா ! நான்கு இளநீர் கொண்டு வா.

[முத்தய்யனும் கறுத்தானும் இளநீர்க் காய்களை எடுத்து வருகின்றனர்.]

கறுத்தா ! அதைச் சீவிக் கண் திறந்து கொடு.

[கொடுக்கிறான். சுபேதாருக்குக் குடிக்கத் தெரியவில்லை. மருது அண்ணாந்து குடிக்கும் முறை கூறுகிறான்.]

**வெல்ஷ்** :—(குடித்துக்கொண்டே) அமுதமாக இருக்கிறது. ஆனால், அண்ணாந்து குடிப்பதால் கழுத்து வலிக்கிறது.

**சி. மருது** : அப்படிச் சொல்லாதீர்கள். இளநீரைக் குடிக்கும் முறையே அதுதான். தென்னை மரம் தாளால் உண்ட நீரைத் தலையால் கொடுக்கிறதே... தேவாமிர்தமாக இனிக்கும் அதன் நீரைப் பருகும் போது ஆகாயத்தை நோக்கிப் பார்த்தாவது நமது நன்றியை அதற்குத் தெரிவித்துக் கொள்ள வேண்டாமா?

**வெல்ஷ்** :—சிந்தனையைக் கிளறும் சீரிய கருத்து.

**சி. மருது** :—என் சொந்தக் கருத்து அது. அதனால் தான், நான் எப்போதுமே இளநீரைக் குவளையில் ஊற்றிக் குடிப்பதில்லை.

**வெல்ஷ்** :—(சிரித்துக்கொண்டே) ஏர் உழுது, பரம்படித்து, நீர் இறைக்கும் காளைகளுக்கும்...பால் தரும் பசுக்களுக்கும் நன்றியைச் செலுத்த 'மாட்டுப் பொங்கல்' கொண்டாடுபவர், நீங்கள். மாடுகளையே மறக்கவில்லையென்றால், கனிதரும் மரங்களிடம் மட்டும் அன்பு காட்டாமல் விட்டுவிடுவீர்களா என்ன?

**சி. மருது** :—பலனை எதிர்பாராமல் உதவி செய்வது... பெற்ற உதவிக்கு நன்றி செலுத்துவது... இதுதான் தமிழர் பண்பாடு.

**வெல்ஷ்** :—ஓ... ஒன்று மறந்து விட்டேனே.

**சி. மருது** :—என்ன...?

**வெல்ஷ்** :—தங்களிடம் முக்கியமான சில போர்ப் பயிற்சிகளைப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்று வந்தேன்.

**சி. மருது** :—மேல்நாட்டாரான உங்களைவிட அதிகமாக எனக்கு என்ன தெரியப் போகிறது?

**வெல்ஷ்** :—தமிழர்களுக்கே உரிய தன்னடக்கத்தோடு பேசுகிறீர்கள். இப்படிப் பேசுவதிலிருந்தே தாங்கள் சிறந்த வீரர் என்பது புலனாகிறது; எனக்குத் தெரியும்... நிறைகுடம் தளும்புவதில்லை.

**சி. மருது** :—நான் நண்பன் என்பதால் என்னைப் பற்றிப் பெருமையாகப் பேசுகிறீர்.

**வெல்ஷ்** :—இல்லை, பிரபு! இன்னும்கூட அதிகமாகத் தங்கள் போர்த் திறமையைப் புகழ்ந்து கூறுவேன். ஆனால், நான் முகஸ்துதி செய்வதாகத் தாங்கள் நினைத்துக்கொள்வீர்களோ என்ற அச்சம்.

**சி. மருது** :—(சிரித்து) போதும்... போதும்! முகஸ்துதி செய்வதிலும் இப்படி ஒரு ரகம் இருக்கிறது.

**வெல்ஷ்** :—அப்படியானால், எனக்குத் தமிழ் நாட்டுப் போர் முறைகளை...

**சி. மருது** :—ஏதோ எனக்குத் தெரிந்ததைச் சொல்லிக் கொடுக்கிறேன். எது வேண்டும்? சொல்லுங்கள் சிலம்பு ஆடல்...கம்பு சுற்றுதல்...ஈட்டி எறிதல்... நாண் ஏற்றுதல்... கதை எறிதல்... வளரித்தடி வீசுதல்... சுருள் கத்தி சுழற்றுதல்... கவசம் வைத்தல்... கண்கள் இருக்கக் கண்மணி எடுத்தல்... வாள் வீச்சு... வேல் வீச்சு... கவண் எறிதல்... தீப் பந்தம் சுழற்றல்...

**பெரிய மருது** :—(வந்துகொண்டே) சங்கிலி அறுத்தல்... சடுகுடு ஆடுதல்... நெருப்பு விழுங்குதல்... நீரில் மூழ்கல்... மரம் ஏறுதல்... மார்பால் நகர்தல்... கையால் நடத்தல்... விச்சுளி ஆட்டம்... செப்பிடு வித்தை... குதிரை ஏற்றம்... யானை யேற்றம்... கிட்டி பிடித்தல்... கோல் ஆடுதல்... வேலி தாண்டுதல்... மற்போர்... விற்போர்... துப்பாக்கியால் சுடுதல்... பீரங்கி கொளுத்தல்... மூன்று மணி நேரம் மூச்சை அடக்குதல்...

**வெல்ஷ்** :—அடேயப்பா! நிறுத்துங்கள்... நிறுத்துங்கள். எனக்கு மூச்சு நின்றுவிடும்போல் இருக்கிறது.

**சி. மருது** :—இன்னும் இருக்கிறதே, தோழரே! தாவுதல்... தலைகீழாகப் பாய்தல்... நரம்படித்தல்...

**வெல்ஷ்** :—நரம்படித்தலா...?

**சி. மருது** :—ஆமாம். கணுக்காலில் உள்ள ஓர் நரம்பை சிட்டிகை போட்டு சுண்டுச் விரலால் தட்டினல், எப்படிப்பட்ட வீரனும் மயக்கம் போட்டு விழுந்து விடுவான். உணர்வு அற்றுக் கிடக்கும் அவனை

நமக்கு இஷ்டமானபோது, வேறொரு நரம்பைத் தட்டி உணர்ச்சி பெற்று எழச் செய்யலாம்.

**வெல்ஷ்** :—(வியப்புடன்) அப்படியா...?

**சி. மருது** :—நுணுக்கமான கலை தோழரே, அது! கத்தியின்றி இரத்தமின்றி சுலபத்தில் விரோதிகளை மடக்கும் வேலை. அந்தக் கலையால் கை, கால், கண் முதலிய அவயவங்களில் எதைச் செயலற்றதாக்க நினைக்கிறோமோ அதை மட்டும் உணர்வற்றதாக்கி விடலாம். வேண்டும்போது மீண்டும் நரம்பைத் தட்டி உணர்ச்சி ஊட்டி பழையபடி ஆக்கலாம்.

**வெல்ஷ்** :—(ஆச்சரியத்துடன்) O...! My God...!

**சி. மருது** :—அதைப் போலவேதான், வளரித் தடியால் இடம் பார்த்துத் தட்டினால், பனைமரத்தின் தலையே உருண்டுவிடும். அதுவும் ஒரு அருமையான வித்தை. கேட்பதற்கு வேடிக்கையாக இருக்கும். இந்த வேலைப்பாடுகளைப் பழந்தமிழ் நாட்டில் ஒவ்வொரு வீரனும் கற்றிருந்தான். துரதிருஷ்டம்! இப்போது பெரும்பாலான இடங்களில அவை மறைந்து விட்டன.

**பெ. மருது** :—அவை மட்டுமா, தோழரே! இன்னும், கண்ணுடி மெல்லுதல்...காளை பிடித்தல்...வேங்கையுடன் விளையாடல்... மதங்கொண்ட யானையின் மத்தகத்தைப் பிளத்தல்...

**வெல்ஷ்** :—போதும் நண்பர்களே, போதும்! பெயர்களைக் கேட்டாலே பயமாக இருக்கிறது.

**சி. மருது** :—உமக்கு எது விருப்பமோ... அதைச் சொல்லுங்கள்.

**வெல்ஷ்** :—வளரித்தடி வீசுதலும், கதை எறிதலும் கற்றுக் கொடுங்கள். போதும்!

**சி. மருது** :—ஓய்விருக்கும் பொழுதில் வந்து கற்றுக் கொள்ளுங்கள்.

**வெல்ஷ்** :—மிக்க நன்றி!

**கறுத்தான்** :—(வந்து) உணவு தயாராகி விட்டதுங்க, சாமி!

**சி. மருது** :—உணவை முடித்துக் கொள்வோம்; எழுந்திருங்கள்.

[எழுகின்றனர்.]

**கறுத்தான்** .—(பெரிய மருதுவைப் பார்த்து) வணக்கமுங்க, அய்யா!

**பெ. மருது** :—(புன்முறுவலுடன்) நலந்தானா, கறுத்தா(ன்)! உணவு எப்படி...?

**கறுத்தான்** :—கிச்சிலி சம்பா சோறு... மடவை மீன் குழம்பு... மான்கறி வறுவல்... மாடப் புறா பொரியல்... இன்னும் ஏழெட்டு ரகம் இருக்குதுங்க.

**பெ. மருது** :—(வெல்ஷை அணைத்த வண்ணம்) அடிசக்கை! நமக்கு விருந்து பிரமாதம்தான் போங்கள்.

[சிரித்தவாறே உட்செல்கின்றனர்.]

— **திரை** —

## காட்சி 3

சிவகங்கை
அரண்மனை

[அரசன் முத்து வடுகநாதன் ஒற்றர் தந்த ஓலையுடன் சீற்றமே உருவாக உள்ளான். அருகில் அரசி வேலு நாச்சி, மருது சகோதரர்கள், அமைச்சர், க த் தான் முதலானோர்...]

**வடுகநாதன் :**—நமக்குப் பிரமாதமான விருந்து. அறுசுவையை ருசித்து மகிழும் வாய்க்கல்ல விருந்து; ஆணவம் பிடித்தோரை அடக்கத் துடிக்கும் நமது வாளுக்கு விருந்து

**பெ. மருது :**—நமக்கு விரோதிகளா ? சிவகங்கைச் சீமை என்ற சொல்லைக் கேட்டால் கற்சிலைகூட களையிழந்து விடுமே...

**வடுகநாதன் :**—கற்சிலையாக இருந்தால்கூடப் பரவாயில்லையே, தம்பி ! புல்தரை யல்லவா போட்டியிடுகிறது, போர்வாளுடன் !

**வேலு நாச்சி :**—யார் அவர்கள் ? எங்கிருப்பவர்கள்......

**வடுகநாதன் :**—சொந்த நாடு இதுவாக இருந்தால் அல்லவா, எந்த ஊர் என்று குறிப்பிடமுடியும் ? படையெடுக்கப் போவது பறங்கிக்காரர்களாம்...

**சி. மருது :**—(இகழ்ச்சியுடன்) ஊர்க்குருவி உயர உயரப் பறந்து பார்க்கிறது.

**வடுகநாதன்** :—அப்படி அலட்சியமாக இந்த விஷயத்தில் இருந்து விடக்கூடாது, மருது. இராமநாதபுரத்தில் வெற்றிக்கொடி பறக்கவிட்ட வெள்ளைப் படை தளகர்த்தன் ஜோசப் ஸ்மித்தும், கர்னல் பான் ஷோரும் முன் நின்று படை நடத்துகிறார்களாம்.

**பெ. மருது** :—இங்கிருப்பவர்கள் ஒத்துழைக்கவில்லை யென்றால், அவர்களுக்கு எங்கிருந்து வரும் இவ்வளவு துணிச்சல்!...

**வேலு நாச்சி** :—அது யார், அப்படிப்பட்ட தேசத் துரோகிகள் ?

**சி. மருது** :—ஆகாயத்திலிருந்தா குதித்து விட்டார்கள் ? வீரம் விளைந்த செந்தமிழ் நாட்டில் பிறந்தவர்கள் தான், புதுக்கோட்டை தொண்டைமானும் அவன் நண்பர்களும்...! ஆங்கிலேயரின் கைப் பொம்மை யான ஆர்க்காட்டு நவாபு முகம்மது அலியும் அவன் ஆட்களும்......!

**பெ. மருது** :—பித்தர்கள்... நச்சுக்குணம் கொண்ட பேயர்கள் !

**வடுகநாதன்** :—பேசிக் கொண்டிருப்பதில் பயனில்லை. இதைப் பற்றி இப்போதே ஆலோசிக்க வேண்டும்.

**வேலு நாச்சி** :—(துடிப்புடன் உடைவாளை உருவி) ஆலோசனை எதற்கு ? செயலில் இறங்குங்கள்.

ஈட்டிகளைத் தீட்டிக் கொள்ளுங்கள், மருது சகோதரர்களே ! அவை நம் பகைவர்களின் மார்பில் எட்டின மட்டும் பாயட்டும் !

வேல் எங்கே? கொடியவர் செயலை வேரோடு அறுக்கும் கூர்வாள் எங்கே? வில் எங்கே? வஞ்சகர் களின் நெஞ்சத்தைப் பிளந்தெடுக்கும் வலிய அம்பு எங்கே?—எல்லாவற்றையும் எடுத்துக்கொள்ளுங் கள்!

காளையார் கோயிலுக்கு இன்றே புறப்படு வோம். போர் இடுவதற்கு அருமையான இடம் அது ஒன்றுதான்.

இப்போதே கிளம்புங்கள்! போருக்கு... வீரத் திற்குப் பேர்போன ஆண்கள் வரட்டும்! ஆண்மை நிறைந்த பெண்கள் வரட்டும்! பெரியவர்கள்...சிறிய வர்கள்...தன்மானம் உள்ள செல்வங்கள்...எல்லோ ருமே வரட்டும்!

வீழ்த்துவோம் விரோதிகளை! வாழ்த்துவோம் தாயகத்தை!!

— திரை —

## காட்சி 4

புதுக்கோட்டை
ஒரு நெடுஞ்சாலை

[கறுத்தான் தலையில் ஒரு மூட்டை யுடன் நடந்து வருகிறான். தளபதி இன்ஸ், புதுக்கோட்டை தொண்டைமான் இரு வரும் புரவிமீது வந்து இறங்குகின்றனர்.]

**தொண்டைமான்** :—தளபதியாரே! அதோ செல்கிறனே... ஒரு மறவன், அவன் காளையார் கோவிலைச் சேர்ந்தவன். அவனுக்கு சிவகங்கை, காளையார் கோயில் முதலிய இடங்களின் இரகசிய அமைப்புக் கள் தெரியும். அவனைக் கைக்குள் போட்டுக் கொண்டால், நம் காரியம் முடிந்த மாதிரி.

[கறுத்தான் அருகில் வருகிறன்.]

**இன்ஸ்** :—உன்னை எங்கேயோ பார்த்த கவனம்...

**கறுத்தான்** :—பார்த்திருக்க முடியாதே. என் சொந்த ஊர் காளையார் கோயில.

**தொண்டை** :—உன் பெயர் கறுத்தான். இல்லையா?

**கறுத்தான்** :—(முகம் மலர்ந்தவனக) ஆமா(ம்). உங் களுக்கு எப்படித் தெரியும்? நீங்கள் யார்...?

**இன்ஸ்** :—இவர் புதுக்கோட்டை மன்னர்...

**தொண்டை** :—(கனிவுடன்) மூட்டையை நீ ஏன் சுமந்து வருகிறய்? குதிரையின்மேல் வை, கறுத்தா!

[கறுத்தான் வைக்கிறன்.]

**கறுத்தான்** :—ரொம்பவும் நன்றி, அய்யா! என்னல் ஏதாவது ஆகணும்ன சொல்லுங்க. செய்யறேன்.

**இன்ஸ்** :—உன்னைப் பார்த்தால் பெரிய வீரனைப்போல இருக்கிறய். கும்பினிப் படையில் சேர்ந்தால் கொள்ளை கொள்ளையாகப் பணம் கொடுப்பார்கள்.

**கறுத்தான்** :—(பதறி) அய்யோ! நாங்க பரம்பரை பரம்பரையா சிவகங்கை ஜமீனில் இருந்து வர்ரேமுங்க. அவுங்க உப்பைத் தின்னு வளர்ந்த உடம்பு.

**தொண்டை.**—அட, துப்பு கெட்டவனே! இதையெல்லாம் பார்த்தா முடியுமா? உலகத்தில் பிறந்தோம். பொன்னும் பொருளும் சம்பாதிச்சு, சுகபோகத்தோடு வாழவேண்டும். அதுதான் வாழ்க்கை. என்னையே எடுத்துக்கொள். நான் எப்படி வாழ்கிறேன் பார். பிறர் என்ன நினைப்பார்களோ எதைச் சொல்வார்களோ என்று பயந்தால் நாம் இன்பமாக வாழமுடியாது. இதோ... இந்தா...! இதில் நூறு வராகன் இருக்கிறது. வைத்துக் கொள்.

**கறுத்தான் :**—(கண்கள் அகல) நூறு வராகனு...?

**தொண்டை :**—இன்னும்கூட அதிகமாகக் கிடைக்கும். நல்ல நல்ல ஆடைகளாக வாங்கிக் கொள்.

[பண முடிப்பை அவன் கையில் திணிக்கிருன்.]

**இன்ஸ் :**—உன்னை எங்கள் அந்தரங்கத் தோழனுக நியமித்துக் கொள்கிறோம்.

**தொண்டை :**—என்ன கறுத்தா(ன்)?

**கறுத்தான் :**—(மனம் மாறியவனுக) என் பாக்கியம்!

[சாலை திருப்பத்தில் மறைகின்றனர்.]

—திரை—

## காட்சி 5

### புதுக்கோட்டை
### அரண்மனை

[புதுக்கோட்டை தொண்டைமானும், ஆர்க்காட்டு நவாபும் உரையாடிக் கொண்டிருக்கின்றனர்.]

**தொண்டைமான் :—** (கிண்டலாக) 'வீழ்த்துவோம் விரோதிகளை — வாழ்த்துவோம் தாயகத்தை!' வேடிக்கையாக இல்லையா தோழரே, இந்த வார்த்தைகள்?

**நவாபு :—**அச்சா...அச்சா! தாயகமாமே தாயகம். அது எதுவோ தெரியவில்லை... தரித்திரம்...

**தொண்டைமான்:—**இது தாயகம் என்றால்... தந்தையகம் எதுவோ...?

**நவாபு :—**அப்புறம் அண்ணா அகம்...தம்பி அகம்...! ஆஹா...ஹா...நாட்டையே கெடுத்துக் குட்டிச் சுவராக்கிவிடுவான்கள், பயல்கள்.

**தொண்டைமான் :—**இல்லையென்றால் நம்மீது பழி சுமத்துவார்களா... நாம்தான் தேசத்தையே காட்டிக் கொடுத்துவிடுகிறோம் என்று.

**நவாபு:—**ஓஹோ...ஹோ...வாயைத் திறந்து சொல்லியே விட்டார்களா...? அச்சா...அச்சா...!

**தொண்டைமான் :—**அவமானம்! அவமானம்! இன்னும் என்னென்ன சொல்கிறார்கள், தெரியுமா? 'ஆர்க்காட்டு நவாபு ஆங்கிலேயரின் கைப் பொம்மை' அப்படி இப்படி என்று கூட....

**நவாபு** :—ஆஹா... ஆஹா! என்னையும் சொல்லிவிட்டார்களா? உங்களைத்தான், 'புதுக்கோட்டை தொண்டைமான் 'நயவஞ்சக நரி...சுயநலப் புலி' என்று சொன்னதாக நாம் கேள்விப்பட்டோம்.

**தொண்டைமான்** : —(மழுப்பியவாறு) ஹி...ஹி...நம் இருவரையுமே குறை கூறுகிறார்கள்; நாம் ஆங்கிலேயனிடம் கைக்கூலி பெற்றுக்கொண்டு தமிழ் மக்களைக் காட்டிக் கொடுக்கிறோமாம்...

**நவாபு** :—அடா...டா...டா ! காட்டிக் கொடுப்பதாவது ...பூட்டிக் கொடுப்பதாவது? சோம்பேறிகள்... இவர்களை யார் 'சுதந்திரம்—சுதந்திரம்' என்று கூத்தாடச் சொன்னது?

**தொண்டைமான்** :—அந்த மானங்கெட்ட மருதுப் பயகளும், முத்து வடுகநாதனும் காளையார் கோயிலில் கம்பெனிப் படைகளை எதிர்த்திருக்கிறார்களாம்.

**நவாபு** :—ஆயிரம் எதிர்த்தாலும் பறங்கிப் படைகளுக்கு 'ஜவாப்' சொல்ல முடியாது! ஏனென்றால், நம் வீரர்களும் அவர்களுடன் கலந்திருக்கிறார்கள் அல்லவா?

**தொண்டைமான்** :—ஆமாம்... ஆமாம்...

**நவாபு** :—யார் செத்தால் என்ன? பிழைத்தால் என்ன? நமக்கு வேண்டியது பணம்...ஏராளமான பணம் ! அதனால் வரும் சுகம்...நிம்மதியான சுகம் !

**தொண்டைமான்** :— (ஆமோதித்து) ஆமாம்...ம்... வெள்ளைக்காரர் ஜெயித்துவிட்டால்...

**நவாபு** :—சிவகங்கை பாளையத்தை எட்டு வருஷம் கிஸ்திக்கு என்னிடம் விடுவதாகப் பேச்சு...! நாம் பலருக்குக் குத்தகைக்கு விட்டுப் பணம் திரட்ட வேண்டும்......

**தொண்டைமான்** :—நல்ல திட்டம்தான்! வெற்றி கிட்ட அல்லா அருள் புரிவார்!

**நவாபு** :—அச்சா...அச்சா! தூண்டில் போட்ட பிறகு, கண், தக்கை மீதுதானே இருக்கவேண்டும் வாருங்கள்...போர் நிலைமையை அறிந்துகொள்வோம்.

— **திரை** —

## காட்சி 6

காளையார் கோயில்

**அரண்**

[காளையார் கோயிலில் கடும்போர் வெள்ளையருக்கும்...வீர மறவர்களுக்கும்! மருது சகோதரர்கள் வெஞ்சினமே உருவாகப் பகைவர்களை வீழ்த்துகின்றனர். இராணி வேலு நாச்சியார் புரவி மீதேறி போர்க்களத்தில் காற்றாய்ப் பறந்து எதிரிகளைச்சாடுகிருள். கம்பெனிப் படையில் ஆட்கள் அதிகம்...அத்துடன் புதுக்கோட்டை மன்னனும் ஆர்க்காட்டு நவாபும் அனுப்பிய கூலிப் பட்டாளம் வேறு. மறவர் படை வீழ்கிறது...

அரசன் முத்து வடுகநாதன் தன்னந் தனியனுகப் போரிடுகின்றன். அய்யோ! ஆங்கிலேயரின் கைக் கூலியான கறுத் தான் நன்றியில்லாமல், அரசனின் வலது முழங்கையைத் துண்டாடி விடுகிறுன். துண்டாடப்பட்ட கையிலிருந்தும் புண் பட்ட உடலிலிருந்தும் இரத்தம் பெருக் கெடுக்க, அருகில் கிடந்த இருக்கையில் சாய்ந்துவிடுகிறுன், வடுகநாதன்!இரத்தம் தோய்ந்த வாளுடன் அங்குவந்த...]

**வேலு நாச்சி :**—பிழைக்க வந்தவர்களுக்கு இவ்வளவு ஆணவமா? ஒழிந்தார்கள் அக்கிரமக்காரர்கள்; பேராசை பிடித்து அலைந்த கூட்டம் இன்று கூண் டோடு ஒழிந்தது! துரோகிகளின் குருதியில் தோய்ந்த கத்தி...ஆஹா...பார்ப்பதற்கே இன்ப மாக இருக்கிறது.

[வாளுக்கு முத்தமிடுகிறுள், வெறி யுணர்ச்சியுடன்...]

ஆணவக்காரர்களின் தலைகளை உருட்டிவிட்ட தங் கள் கரங்களைத் தாருங்கள்...என் அன்பளிப்பைத் தருகிறேன்!

[சோர்ந்து கிடக்கும் அரசனின் வலது கை வெட்டுப்பட்டிருப்பதைக் கவனித்து விடுகிறுள்.]

**வேலுநாச்சி :**—(திடுக்கிட்டு) ஆ! பிரபு...என் இதயமே!

**வடுகநாதன் :—** (சோர்வுடன்) கலங்கக் கூடாது, கண்ணே! தமிழ்ப் பெண்ணல்லவா, நீ!

[அரசி மனம் ஒரு கணம் பேதலித்துப் பின் தீவிர எழுச்சி பெறுகிறது. தன் போர் அங்கியைக் கிழித்து வெட்டுப்பட்ட இடத்தைக் கட்டிக்கொண்டே...]

**வேலு நாச்சி :—**(கலக்கத்துடன்) கலங்கவில்லை, கண்ணாளா! கண்ணீர் விடவில்லை, நான்! கடல் தாண்டி வந்த கள்வர் கூட்டத்தை ஒழிக்கும்வரை நான் கலங்கப் போவதில்லை. அவர்கள் தாளடி தாங்கி நிற்கும் கயவர் கும்பலை அழிக்கும்வரை நான் கண்ணீர்விடப்போவதில்லை...கண்ணுறங்கப் போவதில்லை! சிவகங்கைப் பாளையத்தரசி வேலு நாச்சியின் அன்புக் கணவனையா அவர்கள் கொன்றார்கள் ? இல்லை...அன்பரே...இல்லை! ஈடு இணையற்ற தன் மானத்தமிழ்க் கிழவனையல்லவா கொன்றுவிட்டார்கள்! பறங்கிக்காரன்...

**வடுகநாதன் :—**பறங்கிக்காரன் என்னை வீழ்த்தியிருந்தால்கூடப் பரவாயில்லை...வீரப் புண்பட்டு வீழ்கிறோம் என்ற வெற்றிப் பரவசத்துடன் கண்களை மூடுவேன். இப்போது அந்தத் திருப்திகூட எனக்கில்லையே, வேலு!

**வேலு நாச்சி :—**ஏன்...ஏன்? வீழ்த்த முடியாத தங்கள் உடலைச் சாய்த்த, அந்தச் சண்டாளன் வேறு யார்... யார்?

**வடுகநாதன் :—** அதை எப்படி என் வாயால் சொல்லுவேன்? வேண்டாம், வேலு நாச்சி...!அது யார் என்று மட்டும் கேட்காதே...

**வேலு நாச்சி :**— தாங்கள் சொல்ல மறுப்பதிலிருந்து எனக்குப் புரிகிறது. வேறு யாராக இருக்க முடியும்? காட்டிக் கொடுக்கும் கயமைக் குணம் படைத்த புதுக்கோட்டை தொண்டைமானின் கூலிப் படையைச் சேர்ந்த தமிழனாகத்தான் இருக்க முடியும்.

**வடுகநாதன் :**— (மெதுவாக) உரக்கச் சொல்லாதே வேலு! அந்நியர் யார் காதிலேயாவது விழப் போகிறது. தமிழகத்திலும் இப்படிப்பட்ட இனத் துரோகிகள் இருக்கிறார்கள் என்பது யாருக்காவது தெரிந்துவிடப் போகிறது...

**வேலு நாச்சி :**—ஏன் மூடி மறைக்க வேண்டும்? ஊரறிந்த இந்த விஷயத்தைக் கேட்டுத்தான், பக்கத்து நாடெல்லாம் கை கொட்டி நகைக்கிறதே! 'தமிழர்களிடத்திலே ஒற்றுமையில்லை......கருத்து வேற்றுமைக்கு இடமளித்து இனத்தைக் கட்டிக் காக்கும் பண்பு இல்லை......தலைவர்களிடத்தில் ஒருவர்க்கொருவர் விட்டுக் கொடுக்கும் உயர் மனம் இல்லை' என்று நம் நாட்டில் குடியேறிப் பிழைக்க வந்தவர்கள்கூட, கூடிக் கூடிப் பேசிக் கேலிசெய்கின்றனரே !

**வடுகநாதன் :**— அதையெல்லாம் என் காதில் போடாதே, கண்ணே! சற்றுப் பொறுத்துப் பிரியப் போகும் என் உயிர் இப்போதே பிரிந்துவிடும் போலிருக்கிறது.

**வேலு நாச்சி :**—(கண்ணீர் மல்கி) என்னென்னவோ சொல்கிறீர்களே, பிரபு. வஞ்சகர் செய்த தீச்செயலை

நினைத்தால் என்வயிறு பற்றி எரிகிறது. ஆனால், அதையும் மீறி நெஞ்சின் ஆழத்தில் பதிந்திருக்கும் தங்கள் மீதுள்ள வாஞ்சை அலை அடங்காத் துயரை எழுப்புகிறதே; என்ன செய்வேன்...? (அவன் கால்களைக் கட்டிக்கொண்டு) வீரர் வழி வந்தவள் கோழைத்தனமாக நடந்துகொள்கிறேன் என்று பழி சுமத்தாதீர்கள், சுவாமி! என் உயிர் உள்ளவரை தங்கள் உயிர் பிரிவதற்குச் சம்மதிக்கமாட்டேன். சம்மதிக்கவே மாட்டேன்...!இப்போதே ஓடிச் சென்று பச்சிலை கொண்டுவந்து தங்கள் புண்ணுக்கு மருந்திடுகின்றேன்.

[எழுகிறாள்.]

**வடுகநாதன் :—** சஞ்சலப்படாதே, நாச்சி! என் புண்ணுக்கு மருந்து வேண்டாம். கண்ணுக்குக் கண்ணானவளே...!சோற்றுத் துருத்திகளாக, சொத்தை வாழ்வு வாழ்ந்திடும் இனத்துரோகிகளை வெட்டி வீழ்த்தித் தமிழ் மண்ணுக்கு வீர விருந்திடு! அதன் மூலம் நீ புகழ் பெற்று வாழ்ந்திடு! எங்கே, என் ஆத்மா சாந்தியடைய உன் அமுத வாய் திறந்து ஒரு முறை சொல்...! 'வீழ்க அடிமை மனப்பான்மை...!'

**வேலு நாச்சி :—** (ஆவேசத்துடன்) 'வீழ்க அடிமை மனப்பான்மை!'

**வடுகநாதன் :—** (தெளிவுடன்) 'வெல்க சிவகங்கைச் சீமை...'

**வேலு நாச்சி :—** (அடங்காத் துயருடன்) 'வெல்க சிவகங்கைச் சீமை!'

**வடுகநாதன் :—** (உணர்ச்சியுடன்) 'வாழ்க செந்தமிழ் நாடு...'

**வேலு நாச்சி :—** (சோகத்துடன்) 'வாழ்க செந்தமிழ் நாடு!'...சற்று இருங்கள். நான் சென்று பச்சிலை பறித்து வருகிறேன்!

[சோகந் தாங்காத இதயத்துடன் ஓடு கிறாள். **'வாழ்க செந்தமிழ் நாடு'** என்ற மெல்லிய ஒலியுடன் கூறிக்கொண்டே யிருக்கிறான், அரசன். அந்த வழியாக, வெள்ளைக்காரன் கர்னல் பான்ஷோர், கறுத்தான் இருவருநான்கைந்து சிப்பாய்க ளோடு வருகின்றனர். வயது முதிர்ந்த அரசனால் எழுந்திருக்கவும் முடியவில்லை.]

**பான்ஷோர் :—**இத்தனை நாட்களாக உம்மைத்தான் எதிர் பார்த்திருந்தேன், வடுகநாதரே! ஏய், கறுத்தான்! இவரைக் கைது செய்து அழைத்து வா!

[செல்கிறான். சிப்பாய்கள் அருகே சென்றபோது அரசன், இடது கரத்தில் வாளேந்தித் தள்ளாடித் தள்ளாடி அவர் களைத் தாக்க முயல்கிறான். அடடா! திடகாத்திரமான சிப்பாய்கள் ஒன்று சேர்ந்து அவனை அடித்து நொறுக்கிவிடு கின்றனர். அப்போது சுழலும் வாட் களுடன் ஓடிவந்து அவர்களை விரட்டி யடிக்கின்றனர், மருது சகோதரர்கள். கறுத்தான் மறைந்துகொள்கிறான். அர

சனைத் தன் மடியில் கிடத்திக்கொள்கிறன், சின்ன மருது.]

**சி. மருது :**—அரசே! அரசே!!

**பெ. மருது :**—பிரபு! பிரபு!!

**வடுகநாதன் :**—(மூச்சுத் திணற) என் சக்தி அடங்கி வருகிறது, தம்பிகளே! வேலு நாச்சி உங்கள் உடன் பிறந்தவளைப் போல...! உங்களை நம்பித்தான் சிவ கங்கை ஜமீனையும், வேலு நாச்சியையும் விட்டு விட்டுச் செல்கிறேன்.

**சி. மருது :**—எங்கள் மூச்சு இருக்கும் வரை நாங்கள் அடிமை வாழ்வு வாழமாட்டோம், அரசே! அரசியாரையும் கைவிடமாட்டோம்.

**வடுகநாதன் :**—என் ஒரே விருப்பம்...

**பெ. மருது :**—சொல்லுங்கள், பிரபு!

**வடுகநாதன் :**—வேலு நாச்சி பச்சிலைக்காக, இதோ... இந்தப் பக்கம் போனுள். அவளும் நீங்களும் இப்போதே இந்த இடத்தை விட்டு அகன்றுவிடுங்கள்.

**சி. மருது :**—என்ன நமக்குச் சொந்தமான இடத்தை விட்டு விட்டா...

**வடுகநாதன் :**—பற்றுதலையும் வீரத்தையும் பற்றிப் பேசிக்கொண்டிருக்கும் நேரமல்ல இது. நாச்சி இங்கு வருவதற்குள், நீங்கள் அந்தப் பக்கம் சென்று அவளை அழைத்துச் செல்லுங்கள். மைசூர் மகா ராஜா திண்டுக்கல்லில் இருக்கிறாராம். அவரிடம்

செல்லுங்கள். அவர் ஆதரவுடன் மீண்டும் வெள்ளை யரை எதிர்த்துப் போராடுங்கள்.

**பெ. மருது :**—நம் சீமையை விட்டுப் போகவே மனம் வரவில்லை. இறந்தாலும் இங்கு இறப்பதே சிறந்தது.

**வடுகநாதன் :**—விவாதம் ஒன்றும் வேண்டாம். என் கடைசி ஆசையை நிறைவேற்றுங்கள்; இப்போதே தப்பிவிடுங்கள்...!

[அரசன் மூச்சு நிற்கிறது. மருது பாண்டியர், எழுந்து வணங்கிவிட்டு நீர் சிந்தும் விழிகளுடன் நாச்சியார் சென்ற திசையில் நடக்கின்றனர். மறைந்திருந்த கறுத்தான் ஆட்களுடன் வந்து அரசனைத் தூக்கிச் செல்கிறான், அதிகாரத்தோடு!]

**— திரை —**

## காட்சி 7

காளையார் கோவில்
காடு

[வேலு நாச்சி பச்சிலையுடன் வருகிறாள்; எதிர்ப் பக்கத்திலிருந்து வந்த மருதிருவர், முத்தய்யன் ஆகிய மூவரும் அவளைச் சந்திக்கின்றனர்.]

**பெ. மருது :**—வேலு...!

[அவர்களை வேதனையுடன் ஏறிட்டு நோக்குகிறாள்.]

**சி. மருது:**—(துயருடன்) கப்பல் கவிழ்ந்து விட்டதம்மா!

**வேலு நாச்சி:**—ஆ! என் கண்ணாளர் இறந்துவிட்டாரா? பாவிகள்—என் கண்ணைப் பறித்துக்கொண்டார்களே...!என்னைப் படுகுழியில் தள்ளிவிட்டார்களே!

**பெ. மருது:**—நாங்கள் இருக்கும்வரை நீ எதற்கும் கவலைப்படாதே, வேலு!

**வேலு நாச்சி:**—அய்யோ! நான் இப்போதே அவரிடம் போக வேண்டும். போய் பீறிட்டுக்கொண்டுவரும் கண்ணீரை அவருக்கு அபிஷேகம் செய்யவேண்டும். அப்போதுதான் எனக்குக் கொஞ்சம் ஆறுதலாவது கிடைக்கும்.

**சி. மருது:**— நீ அங்கே போகக் கூடாது, அம்மா! சூழ்நிலை தெரியாமல் பேசாதே!

**வேலு நாச்சி:**—அப்படிச் சொல்லாதீர்கள், அண்ணா! அவரைப் பார்க்கவில்லையென்றால் என் இருதயம் நின்றுவிடும்.

**பெ. மருது:**—நாம் இந்தக் கணமே திண்டுக்கல் போக வேண்டும். புறப்படு, வேலு! குதிரைகள் தயாராக உள்ளன...

**வேலு நாச்சி:**—நான் வரமாட்டேன். என் உயிருக்கு உயிரான அரசரின் உடலை அனாதையாக விட்டு விட்டு நான் வரவே மாட்டேன். என் மனம் முறிந்துவிட்டது. நான் பகைவர்களிடம் சிக்கிச் சிதைந்து போனாலும் கவலையில்லை. இந்த நன்றி கெட்ட நாடு அழிந்து போனாலும் கவலையில்லை.

**சி. மருது :**—தாங்க முடியாத துன்பம் வந்தபோது தானம்மா தனித் தைரியத்துடன் இருக்கவேண்டும். வா, ஆக வேண்டியதைக் கவனிப்போம்.

**பெ. மருது :**—வா, வேலு!

[வேலு நாச்சியின் கையைப்பற்றி இழுத்துச் செல்கிறான்.]

**சி. மருது:**—(முத்தய்யனிடம்) வருந்தாதே, முத்தய்யா! நீ இங்கேயே இருந்து எங்களுக்கு அடிக்கடி செய்தியனுப்பிக்கொண்டிரு. வரட்டுமா?

**முத்தய்யன் :**—(கரங்குவித்து) செய்யுங்க, சாமி!

[சின்ன மருதுவும் செல்கிறான். முத்தய்யன் கலங்கும் கண்களுடன் அவர்களைப் பார்த்துக்கொண்டு நிற்கிறான்.]

—**திரை**—

## காட்சி 8

சிறுவயல்
முத்தய்யன் வீடு

[முத்தய்யனும் அவன் மனைவி முனியம்மாளும்.]

**முத்தய்யன் :**—தாங்கமுடியாத துன்பம் வந்தபோது தாண்டி தனித் தைரியத்துடன் இருக்கணும்.

**முனியம்மா :**—(எரிச்சலுடன்) தெரியும்...தெரியும்? நாக்கிற்கு ருசியா திங்கறதுக்கு சோறும், மனசுக்கு

ஆசையா கட்டிக்கிறதுக்கு துணியும் இல்லை. வீடுங் கற வீட்டிலே நாலு அரிசி அள்ளிப்போட்டு அடுப் புப் பத்தவைக்க விதியில்லை. வீரம் பேசிக்கிட் டிருந்தா போதுமா? அப்புறம் வயித்து மேலே ஈரத் துணி போட்டுதான் படுத்துக்கணும்...

**முத்தய்யன்:**—முனியம்மா! என் கோபத்தைக் கிளறாதே. நம்ம தாய் நாடு...

**முனியம்மா:**— ஆமா(ம்). நாடுகிடக்கிற நிலையை நினைச்சு நீ பரிதவிக்கிறே; வீடு இருக்கிற இருப்பைப் பார்த்து நான் அழுது சாகிறேன்.

**முத்தய்யன் :**—என்னை என்னடி பண்ணச் சொல்றே? மழை பெய்து எத்தனை வருசமாச்சு...மானம்தான் ஏழைங்க வயித்திலெ அடிச்சிடுத்தே.

**முனியம்மா:**— அது(ம்)மேலே ஏன் பழியைப் போடுறே?

**முத்தய்யன் :**—உனக்குத் தெரியாது, முனியம்மா! நீதி நெறி தவறும ஆளுகிற அரசன் நாட்டிலே மாதம் மும்மாரி பொழியுமாம். பறங்கிப் பயலுக நம்ம சீமையிலே எப்ப காலை வச்சானுகளோ, அப்பவே நம்மை தரித்திரம் புடிச்சுடுத்து. கயவாளிப்பயலுக என்னைக்கு நம்ம ராசாவை காட்டிக் கொடுத்தானு களோ, அன்னைக்கே மாச மழை தவறிப் போச்சு. மகாலட்சுமிமாதிரி இருப்பாங்க நம்ம ராணி வேலு நாச்சியம்மா! எட்டு வருசமா மருது அண்ணைச்சி களோடே காட்டிலும் மேட்டிலும் வாழுறாங்க.

**முனியம்மா :**—ஆமா...ராணியை தலைமேல தூக்கி வச்சு ஆடு

**முத்தய்யன்:**—ஏலே! அந்த அம்மாவைப் பற்றி ஏதாவது சொன்னே உன்னை வெட்டி குழி தோண்டிப் பொதைச்சுபுடுவேன். உனக்கென்னடி தெரியும் அவங்க அருமையும், மருதய்யங்களோட பெருமையும்! வெள்ளைக்காரன் நம்ம சீமையை எட்டு வருசத்துக்கு நவாபு கிட்ட குதகைக்கு விட்டானே... நவாபு நம்ம ஜனங்களண்ட ஒரு சல்லிக் காசு வசூல் பண்ண முடிஞ்சுதா...பார்த்தியா? நல்ல வேளையா மானம் காஞ்சிடுச்சு; அதை சாக்கு சொல்லி நம்ம சீமைகாரங்க ஒரு காசுகூட நவாபுக்கு கிஸ்தி கட்டல.

**முனியம்மா:**— நீ ஊரிலே ஒவ்வொரு மகசூலுக்கும் வசூல் பண்றியே... அந்தப் பணத்தை என்ன செய்யறே. எல்லா ஊரிலேயும் வசூல் செய்யற பணத்தை வேறு உங்கிட்ட கொண்டுவந்து கொடுக்கறாங்க.

**முத்தய்யன்:**—அதெல்லாம் அரசாங்க விஷயம். நீ போய் மூலையிலே முடங்கிக் கிட.

**முனியம்மா.**—(செல்லமாக) இவ்வளவு வசூல் பண்றியே, அதிலேதான் அஞ்சு பத்து எடுத்து குடும்பத்தைப் பார்த்தா என்னவாம்?

[அவன் தோள்மீது கையை அன்போடு வைக்கிறாள்.]

**முத்தய்யன்:**—சீ! எடு கையை. வறுமை வந்துட்டா எது வேணுமானாலும் செய்துடறதா என்ன? நான் நம்ம ராசா குடும்பத்துக்குத் துரோகம் செய்யமாட்டேன்.

**முனியம்மா :**—நம்ம ராசா குடும்பமா? அப்படின்னு ஊரிலே வசூலாகிற இந்தப் பணம் ராணிக்குப் போவுதா?

**முத்தய்யன் :**—அந்த வீண் கதையெல்லாம் உனக்கு வேண்டாம். போடி, உள்ளே!

**முனியம்மா :**—போவட்டும்...உன்னைப் பார்க்கிறதுக்கு அடிக்கடி ஒரு கிழவரு வராறே...அவரு யாரு? இந்த ரகசியமெல்லாம் எனக்குச் சொல்லக்கூடாதா?

**முத்தய்யன் :**—முனியம்மா!

**முனியம்மா :**—(ஆசையுடன்) என்ன, மச்சான்!

**முத்தய்யன் :**—உனக்கு மரியாதையா சொல்றேன். போ, உள்ளே!... ம்... போடின்னு...

[முனியம்மா வெறுப்புடன் கழுத்தை நொடித்துவிட்டுப் போகிறாள். ஒரு வாலிபன் அவசரமாக ஓடி வந்து முத்தய்யன் காதில் ஏதோ சொல்கிறான்.]

**முத்தய்யன் :**—எங்கே... மாந்தோப்பிலா இருக்காரு?

**வாலிபன் :**—ஆமா(ம்).

**முத்தய்யன் :**—சரி. இதோ வர்றேன்.

[எழுந்து உள் அறைக்குச் சென்று ஒரு சிறு மூட்டையை எடுத்து வருகிறான். இருவரும் வெளியே செல்கின்றனர். இதைக் கவனித்துக்கொண்டிருந்த முனியம்மாவின் முகத்தில் கேள்விக் குறி படர்கிறது.]

**— திரை —**

## காட்சி 9

சிறுவயல்
ஒரு மாந்தோப்பு

[மங்கலான நிழலில் முத்தய்யனும், அந்த வாலிபனும் வருகின்றனர். அங்கு ஒரு கிழவன் உள்ளான்.]

**முத்தய்யன் :**—(கை கூப்பி) வணக்கம், சாமி !

**கிழவன் :**—வா, முத்தையா ! ஒவ்வொரு வருஷத்துக்கும் நீ எவ்வளவோ மாறிவிட்டாய்.

**முத்தய்யன் :**—(வருத்தமுடன்) சின்ன அய்யா ! நீங்க இப்படியெல்லாம் கஷ்டப்படறதை நினைச்சா வருத்தத்தைத் தாங்க முடியலேங்க.

**கிழவன் :**— உஸ்... நான் சீக்கிரமா போயாகணும். ஊர் முழுதும் நிலைமை எப்படியிருக்கிறது? அதை மட்டும் சொல்.

**முத்தய்யன் .**—கமுதி, காளையார் கோயில், திருமயம், சிவகங்கை முதலிய இடங்களில் ஜரூரா வேலே செய்து வருகிறோமுங்க. ஒருத்தரும் நவாபுக்கு கிஸ்தி கட்டல. அவனுலும் முடிந்த வரை பார்த்துட்டான். ஒண்ணும் நடக்கல. இந்த வருஷம் வசூல் முழுதும் இந்த முடிப்பில் இருக்கு. இதோ... வழிச் செலவுக்குக் கட்டுச் சோறு கொண்டாந்தேன். வைச்சுக்குங்க...! பெரிய அய்யாவையும் இராணி அம்மாவையும் விசாரிச்சதா சொல்லுங்க.

**கிழவன் :**—நாங்க இன்னும் முப்பது நாளில் இங்கே வந்துவிட இருக்கிறோம். அதற்குள் குறைந்தது

ஐயாயிரம் வாலிபர்களையாவது தயார் படுத்தி வைத்துவிடுங்கள்.

**முத்தய்யன் :**—நாங்க இப்பவே தயாருங்க. விவரமா இந்த ஓலையில் எழுதியிருக்கிறோம். இந்தாங்க... நீங்க நாளைக்கே வந்துட்டாலும் சமாளிச்சுக்கிட லாம்.

[கிழவன் ஓலையைப் பெற்றுக்கொண்டு, முடிச்சுக்களுடன் செல்கிறான். முத்தய்ய னும் வாலிபனும் கைகூப்பி விடைபெறுக் கின்றனர்.]

— திரை —

## காட்சி 10

மைசூர் — மகாராஜா அரண்மனை

[பெரிய மருதுவும் வேலு நாச்சியும் இருக்கின்றனர். கிழவன் பண முடிப்பை யும், ஓலைச் சுருளையும் அரசியிடம் கொடுக் கிறான். அவள் சுருளைப் பிரித்துச் செய்தி யைப் படிக்கிறாள்.]

**வேலு நாச்சி :**—(வாசிக்கிறாள்)... நாங்கள் இப்போதும் தயார்தான். நீங்கள் நாளைக்கே வந்தாலும் சமாளித் துக் கொள்ளலாம். ஆறாயிரம் தோழர்கள் போரில் உயிரை விடுவதற்கும் துணிந்து நிற்கிறார்கள்; உடனே வாருங்கள். வாடிய பயிர் வான் மழையை

நோக்குவதைப் போல, தங்கள் வருகையை எதிர் நோக்குகிறோம்.

இந்தப் படிக்கு,
சிவகங்கை மக்கள்.

**பெ. மருது** :—எவ்வளவு நன்றியுள்ளவர்கள். எட்டு ஆண்டுகளாக வருடம் தவருமல் நமக்கு வரி செலுத்தியிருக்கிருர்கள். நவாபு ஏமாந்து விட்டான்.

**வேலு நாச்சி** :—வரலாற்றிலேயே ஒரு புதுமை. அரசி அரசிழந்து வெளி நாட்டில் இருக்கும்போதும், மக்கள் தாங்களாக வரி வசூலித்து தேடி வந்து கொடுத்துவிட்டுப் போகிருர்கள். நல்ல அபிமானி கள்...!

**கிழவன்** :—நாம் இன்றைக்கே நம்ம சீமைக்குப் புறப் படலாமுங்க.

**வேலு நாச்சி** :—புறப்படலாம். பெரியவரே! நீங்கள் தள்ளாத காலத்திலும் எங்கள் நலத்துக்காக ஆண்டு தோறும் வரிப்பணம் வசூல் செய்துவந்து கொடுத் தீர்கள்...

**பெ. மருது** :—அது மட்டுமா? சிவகங்கையிலிருந்து அடிக் கடி செய்தி கொண்டு வந்திருக்கிருர். அடங்கிக் கிடந்த தமிழர்களுக்குச் சுதந்தர உணர்ச்சி ஊட்டி யிருக்கிருர். அவருக்கு அன்பளிப்பாக ஏதாவது கொடுக்க வேண்டும், வேலு!

**கிழவன்** :—எனக்கு எதுக்குங்க அய்யா, அன்பளிப்பு! நாடு நல்லா இருந்தா போதுமுங்க.

**வேலு நாச்சி** :—எங்கள் சின்ன மருதுகூட இப்படித் தான்...எப்போதும் நாட்டின் நலம் பற்றிப் பேசிக் கொண்டிருப்பார். ஓ... இப்போதுதான் கவனம் வருகிறது. சின்னவர் வெளியே சென்று இரண்டு நாட்களாகியும் இன்னும் திரும்பவில்லையே... அவர் இல்லாமல் நாம் எப்படி அண்ணு, புறப்படுவது?

**பெ. மருது** :—அதுதான், வேலு... எனக்கும் சிந்தனை!

**கிழவன்** :—நான் சிறுவயலிலிருந்து வர்றபோது, வழியில் அவரைப் பார்த்தேனுங்க. அவருக்கு சிவகங்கை யில் முக்கிய வேலை யிருக்கிறதாம். நம்மை வந்து விடச் சொன்னுருங்க.

**வேலு நாச்சி** :—சரி! நாம் மகாராஜா ஹைதர் அலியிடம் விடை பெற்றுக் கொள்வோம்.

[ஹைதர் அலி வருகிருர். ஒருவர்க்கு ஒருவர் வணக்கம் செலுத்திக் கொள் கின்றனர்]

**ஹைதர் அலி** :—என்ன தோழரே! இன்னும் சில நாள் தங்கிச் செல்லலாமே! இராணியார் என்ன சொல் கிருர்கள்?

**வேலு நாச்சி** :—மிக்க நன்றி, மகாராஜா! நாங்கள் சந் தர்ப்பம் நேரிட்ட போதெல்லாம் இங்கே வந்து தங்குவதற்குப் பெரிதும் உதவினீர்கள். வெள்ளை யரை எதிர்க்கப் போட்ட திட்டங்களுக்கு ஒத் துழைத்தீர்கள். இப்போது, சிவகங்கையை எங்க ளிடமே மீண்டும் ஒப்படைக்க வேண்டிய நிர்ப்பந் தம் ஆர்க்காட்டு நவாபுக்கு ஏற்பட்டிருக்கிறது.

இந்த நேரத்தில் நாங்கள் நாட்டில் இருந்தால் நெருக்கடியைச் சமாளித்துக் கொள்ளும் வேலையில் ஈடுபட ஏதுவாகும். ஆகவே...

**ஹைதர் அலி** :—சரி. உங்கள் சௌகரியப்படி செய்யுங்கள்.

**பெ. மருது** :—தங்கள் உதவி எப்போதும் வேண்டும்.

**ஹைதர் அலி** :—தேவைப் பட்டால் செய்தி அனுப்புங்கள் ; அவசியம் உதவுகிறேன். எப்படியாவது கும்பினியார் ஒழிந்தால் அதுவே போதும். இராணியாரே ! தங்கள் பிரிவை யொட்டி ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்கிறேன். விருந்துக்குப் பிறகு கலை நிகழ்ச்சியும் உண்டு.

— திரை —

## காட்சி 11

மைசூர்

மகாராஜா அரண்மனை

[விருந்துக்குப் பின்னர் சுதந்தர வாழ்வு பற்றிய கலை நிகழ்ச்சிகள் நடக்கின்றன. முடிந்ததும்...]

**வேலு நாச்சி** :—(கை கூப்பி) விடை கொடுங்கள், மகாராஜா !

**ஹைதர் அலி** :—உடன் பிறந்தோரைப் போலப் பழகி விட்டோம். பிரியவே மனம் இல்லை.

**பெ. மருது** :—சந்தர்ப்பம் வாய்க்கும்போது ஒரு முறை வந்து போகிறோம்.

**வேலு நாச்சி** :—தாங்களும் சிவகங்கைக்கு வந்தருள வேண்டும்.

**ஹைதர் அலி** :—முயற்சிக்கிறேன்.

[பிரியா விடையுடன் பிரிகின்றனர். இராணியும், பெரிய மருதுவுடன் கிழவனும் குதிரைகள் மீதேறிச் செல்கின்றனர்.]

— **திரை** —

## காட்சி 12

மதுரை
கர்னல் வெல்ஷ் துரையின் இல்லம்.

[வெல்ஷ் துப்பாக்கியைச் சரி பார்த்துக் கொண்டிருக்கிறான். அவனுடன் கறுத்தானும், கர்னல் அக்நியு என்பவனும் உள்ளனர். முத்தய்யன் இரண்டு பழக்கூடைகளும், இரண்டு மூட்டைகளும் கொண்டு வருகிறான். கறுத்தான் வெள்ளையருடன் இருப்பதைக் கண்டு திடுக்கிடுகிறான்.]

**வெல்ஷ்** :—ஓ...! முத்தய்யனா...? வா... வா...! இவர்கள் நமக்கு வேண்டியவர்கள் தான்.

**முத்தய்யன்** :—இதை நம் சின்ன எசமான் அனுப்பினாருங்க.

**வெல்ஷ்** :—அவர் என்னை மறக்கவே யில்லையே... மிக்க மகிழ்ச்சி.

**அக்நியு** :—யார் அவர் ?

**வெல்ஷ்** :—சிவகங்கை ஜமீனில் இருப்பவர்... சின்ன மருதேந்திரர்.

**அக்நியு** :—ஓ... கேள்விப்பட்டிருக்கிறேன். பெரிய மருது என்பவர்கூட அங்கே யிருக்கிருராமே... அவர் பெரிய வீரராம்.

**வெல்ஷ்** :—' வீரர் ' என்று சாதாரணமாகச் சொன்னல் போதாது. கையில் கத்தி, கம்பு இல்லாமல் என் எதிரிலேயே எத்தனையோ புலிகளையும், சிங்கங்களை யும் கொன்றிருக்கிருர். வீரத்தில் 'குஷ் வமிசத்தை யும்' தோற்கடிப்பார்... வேட்டையில் நிபுணர்...! பாபிலோனிய மக்கள் வீரத்திற்குத் தந்தையாக 'நிம் ராட்'டைச் சொல்வார்கள். பெரிய மருது கீழ்த் திசை 'நிம்ராட். !'

**அக்நியு** :—இவர்கள் எப்படி உமக்குப் பழக்கம் ?

**வெல்ஷ்** :—ஒருநாள் வழிப்போக்கின்போது சின்ன மருதுவை சாதாரணமாக சந்தித்ததுதான். அன்று முதல் நட்பு வளர்ந்தது. சின்ன மருதிடம் நான் தமிழ்நாட்டுப் போர் முறைகளைக் கற்றுக்கொண் டேன். குறிப்பாக 'கதை' எறியும் வித்தையை அவரிடமே கற்றேன். இப்போது அத்துறையில் நல்ல தேர்ச்சி...! முந்நூறு அடிக்கு அப்பால் உள்ள வர்களையும் குறிபார்த்து அடித்து சுலபத்தில் வீழ்த்தி விடுவேன்.

**முத்தய்யன்** :—நான் வரட்டுங்களா...?

**வெல்ஷ்** :—ம்... மூட்டையில் என்ன, முத்தய்யா !

**முத்தய்யன் :**—ஒரு மூட்டையில் சீரகச் சம்பா அரிசி. இன்னொன்றில் இளநீர்க் காய்கள்.

**வெல்ஷ் :**—நல்லது, முத்தய்யா! சின்ன அய்யாவிடம் சொல். நான் முன்பு சுபேதாராக இருந்தேன் அல்லவா? இப்போது கர்னல் பதவி கிடைத்திருக்கிறது.

**முத்தய்யன் :**—அய்யாவுக்கு முன்பே தெரியுமுங்க.

**வெல்ஷ் :**—எப்படியோ தெரிந்துகொண்டிருக்கிறரே.

**அக்நியு :**—நல்ல உள்ளம் அவருக்கு! வெள்ளைக்காரர் விரோதிகளாக இருந்தும், உமது நட்பை இன்னும் மறக்கவில்லை! பழகிவிட்டதால் உம்மைப் பழைய நண்பராகவே இன்னும் கருதுகிறுர்.

**வெல்ஷ் :**—நான் அனுபவத்தில் பார்த்திருக்கிறேன். தமிழர்களிடம் உள்ள உயர்ந்த பண்பாடுகளில் இதுவும் ஒன்று...! ம்... முத்தய்யா! சிவகங்கை நிலைமை எப்படி யிருக்கிறது?

**முத்தய்யன்:**—இராணியம்மாவுக்கு உடல் நிலை சரியில் லைங்க. அதனுல் ஆட்சியை நம்ம மருதய்யங்களே கவனிச்சுக்கருங்க. மற்றபடி, நாடு சுபிட்சமா இருக்குது.

**வெல்ஷ் :**—சின்ன அய்யாவுக்கும் பெரிய அய்யாவுக்கும் என் நன்றியையும் வணக்கத்தையும் சொல், முத்தய்யா!

[கருத்தானைக் கூர்ந்து நோக்கிய வண்ணம், விடைபெற்று வெளியே செல்கிருன். கருத்தான் அவனை அலட்சிய

மாகப் பார்த்துவிட்டு ஆரஞ்சுப் பழங்களை எடுத்து உரித்து இருவர்க்கும்கொடுக்கிறன் ]

**அக்நியு** :—(தின்று கொண்டே) நல்ல ருசி...

**வெல்ஷ்** :—இந்தியாவிலேயே இவ்வளவு சுவையுள்ள ஆரஞ்சுப் பழங்களை நான் வேறு எங்கும் தின்றதில்லை. வாரத்திற்கு ஒரு முறை அரிசியும் பழவகைகளும் தவருமல் அனுப்பி விடுவார். சின்ன மருது.

**அக்நியு** :—மிஸ்டர் வெல்ஷ்! இவர்கள் விஷயத்தில் நீர் சற்று ஜாக்கிரதையாகவே இருக்க வேண்டும்.

**வெல்ஷ்** :—ஏன்...?

**அக்நியு** :—என்றைக்கிருந்தாலும் அவர்கள் கம்பெனியின் பகைவர்கள்.

**வெல்ஷ்** :—அதனுல்...எங்கள் நட்பை இழந்துவிட நான் தயாராக இல்லை, தோழரே !

**அக்நியு** :—வாட்...! (சிரித்து) எனக்கென்ன ? அனுபவத்திற்கு வரும்போது நீராகவே தெரிந்து கொள்ளப் போகிறீர்.

[கறுத்தான் சீவிக்கொடுத்த இளநீரைக் குடிக்கிறனர்.]

**வெல்ஷ்** :—கறுத்தான் !

**கறுத்தான்** :—சார்...!

**வெல்ஷ்** :—துப்பாக்கிகளை எடுத்துக்கொள். வேட்டைக்குச் செல்வோம். புறப்படலாமா, மிஸ்டர் அக்நியு !

**அக்நியு :**—ஓ...!

[இருவரும் புகைத்துக் கொண்டே செல்கின்றனர். கறுத்தான் துப்பாக்கிகளோடு, அக்நியு கூறிய 'வாட்...' என்ற சொல்லே, இரண்டு மூன்று தடவை உச்சரித்துப் பயிற்சி செய்துகொண்டே அவர்கள் பின் நடக்கிருன்.]

— **திரை** —

## காட்சி 13

சிவகங்கை
அரண்மனே

[வேலு நாச்சி மரணப் படுக்கையில் உள்ளாள். அவளேச் சுற்றி மருது சகோதரர்கள், முத்தய்யன், மற்றும் பலர்.]

**வேலு நாச்சி :**—(மெல்லிய குரலில்) அரசர் மறைந்த பிறகு, எனக்கு எவ்வளவோ உறுதுணையாக இருந்தீர்கள். தாய்நாடு அடிமையாகக் கூடாது என்று உயிரைக் கொடுத்தும் போராடினீர்கள்! என் அவா...சிவகங்கை யாருக்குமே அடங்கி யிருக்கக் கூடாது. சுதந்தரத்தோடு வாழவேண்டும்!

**பெ. மருது :**—எல்லாவற்றையும் நாங்கள் கவனித்துக் கொள்கிறேம். நீங்கள் அமைதியாக இருங்கள்.

**வேலு நாச்சி :**—(மூச்சுத் திணறியபடி) உங்கள் இருவரின் நம்பிக்கை ஒளிவீசும் முகங்களேப் பார்க்கும்

போதெல்லாம் நான் அமைதியாகவே இருக்கிறேன். கடமை வீரன் கட்டபொம்மனைத் தூக்கில் இட்டு ஓராண்டு ஆகிறது. ஆனால், அந்தக் கண்ணிய வானைக் காட்டிக் கொடுத்த கயவர்கள் இன்னும் வாழ்கிறார்கள். அவர்களுடைய கழுகுப் பார்வை யில் சிக்காத வண்ணம் நீங்கள் விழிப்போடு இருக்க வேண்டும். ஊமைத்துரைக்கு உதவியாக வீரர்களை அனுப்பிக்கொண்டே யிருங்கள். அவர் நம்மைப் போன்றவர்களின் உதவியை நம்பிதான் கொள்ளைக் கார வெள்ளையரை எதிர்த்துத் தன்னந்தனியாகப் போரில் குதித்திருக்கிறார்.

**சி. மருது** :—தங்கள் விருப்பத்தின்படியே நடக்கிறோம், அம்மா! நீங்கள் ஒய்வாக இருங்கள். உடல் நல மில்லாதிருக்கும்போது எதைப்பற்றியும் அதிகமாகச் சிந்திக்கக்கூடாது.

**வேலு நாச்சி** :—எனக்கென்னவோ... எல்லோரையும் ஒரு தடவை பார்க்கவேண்டும் போல இருக்கிறது.

**சி. மருது** :—இன்னும் யாரையாவது பார்க்கவேண்டு மா...?

**வேலு நாச்சி** :—(முனகியபடி) முன்பு, நாம் நாட்டுக்கு வெளியில் இருந்தபோது நமக்கு வரி வசூலித்துக் கொடுத்தாரே... அந்தக் கிழவர்...! அவரைத்தான் பார்க்க வேண்டும்.

[சின்ன மருது வேதனையுடன் எழுந்து உள்ளே செல்கிறான்.]

**வேலு நாச்சி :—** (பெரிய மருதுவை நோக்கி) அண்ணு! இனி நான் பிழைக்க மாட்டேன். என்னை நம்பா தீர்கள்! என் உயிர் அடங்கி வருவது எனக்கே நன்ருகத் தெரிகிறது.

[கிழவன் வருகிருன் அவன் கண் களில் நீர் ததும்புகிறது.]

**வேலு நாச்சி :—** வாருங்கள், பெரியவரே! நீங்கள் செய்த உதவிக்கு ஈடாக எதையுமே சொல்ல முடியாது. என் சிறிய அன்பளிப்பாகக் காளையார் கோயிலைத் தருகிறேன். பெற்றுக்கொள்ளுங்கள். (அவன் கைகளைப் பிடித்துக்கொண்டு) இன்னும் எதற்காக, அண்ணு, இந்த வேஷத்தில் இருக்கிறீர்கள்? இந்தக் கோலத்தில் கடைசியாக உங்களைப் பார்க்க ஆசைப் பட்டேன். நீங்கள் யார் என்று எனக்கு முன்பே தெரியும்...

[வேஷத்தைக் கலைக்கிருன்... சின்ன மருது!]

நாட்டு நலனில் தங்களுக்கு இருக்கும் அக்கறை வேறு யாருக்குமேயில்லை, அண்ணு! நீங்களும் அண்ணுவும் ஒற்றுமையாக இருந்து ஜமீனைப் பார்த்துக் கொள்ளுங்கள்.

[அரசியின் கண்கள் மூட, தலை சாய் கிறது. அனைவரும் நீர் சொரியும் கண்க ளுடன் தலை தாழ்த்துகின்றனர்.]

— திரை —

## காட்சி 14

சிறு வயல்

முத்தய்யன் வீடு.

**முத்தய்யன்** :—முனியம்மா...

**முனியம்மா** :—என்ன, மச்சான் !

**முத்தய்யன்** :—நான் அரண்மனைக்குப் போய் வர்றேன். இன்னைக்கு நம்ப சீமை பெரியவங்க எல்லாம் மருது ராசாவிடம் என்னவோ வேண்டுகோள்விடப் போறாங்களாம்.

**முனியம்மா** :—எவனாவது எப்படியாவது போ(கி)றான். அரை நாழிகை நேரம் பக்கத்திலே உட்கார்ந்து ஆசைதீரப் பேசறியா, நீ! எப்ப பார்த்தாலும் 'மகாராசா...மகாராசா'ன்னு அங்கேயே ஓடிப் போறியே. இங்கே, நாலு குழி நிலம் இல்லாம நாறிக் கிடக்கிறோம்.

**முத்தய்யன்** :—உனக்கு கொஞ்சம்கூட விசுவாசமே இல்லையடி. மருதரசருக அரசுக்கு வந்தப்புறம் தான் சீமை எவ்வளவோ செழிப்பா இருக்கே. அப்பகூட உனக்கு விடியலையே.

**முனியம்மா** :—ஆமா ! ஹுக்கும் ! பறங்கிப்படையிலே சேர்ந்திருந்தா இன்னும் எவ்வளவோ சம்பாதிச்சிருக்கலாம். கறுத்தானைப் பாருங்க. எப்படியிருக்கா(ன்). ஒண்ணு சுயபுத்தியாவது இருக்கணும். இல்லே... சொல்புத்தியாவது கேட்கணும். உனக்கு இரண்டுமே இல்லே.

**முத்தய்யன் :**—வாயை மூடிக் கிட்டி, முட்டாள்! பேராசை பிடிச்சு அலையாதேடி... அப்புறம் இருக்கிறதும் போய்விடும். ஏலே, நான் மாலை கருக்கிற போதுதான் வீடு திரும்புவேன்.

[போகிருன். முனியம்மா கழுத்தை நொடிக்கிருள்.]

— திரை —

## காட்சி 15

சிறுவயல்
அரண்மனை

[மருதேந்திரர் இருவரும் உள்ளனர் முத்தய்யன், சின்ன மருதுவின் மகன் துரைசாமி முதலியவர்களோடு, சாந்துப் புலவரும், மறவர் பெருமக்களும் அவையில் அணி செய்கின்றனர்.]

**சாந்துப் புலவர் :**—(எழுந்து) அவையோரே! அறிவு சூழ் பெரியோரே! உங்கள் சார்பாக நான், நமது சிவகங்கை அதிபதிகளான மருதேந்திரர்களிடம் ஒரு விண்ணப்பம் செய்து கொள்கிறேன். நான் கோரப்போகும் உதவி நமக்குப் பெரியது... ஆனல் சேர்வைக்காரர்களுக்குச் சிறியது அவர்கள் மனம் வைத்தால் போதும். மலையும் கடுகாகும்... மணலும் கயிறாகும்! அவர்கள் எண்ணினல் எல்லாம் இனிது முடியும். அவர்கள் எண்ணினர்கள்......

உடனே, குன்றக்குடி முருகனுக்கு மலைமீது திருக்கோயில் உருவாகியது; அங்கிருந்து தெரியும் வண்ணம் மருதாபுரிக்குளம் உண்டாகியது; அதன் கரையில் ஆயிரம் தென்னை மரங்கள் வளர்ந்தன. குன்றக்குடி குமரக் கடவுளின் அழகிய மார்பில் 'சின்ன மருது உபயம்' என்ற எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட பொற்கவசம் மின்னுகிறது. மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் அணையா விளக்குகளாக இரு 'திருவாட்சித் தீபங்கள்' மிளிர்கின்றன. அதன் நெய் செலவுக்காக 'ஆவியூரை' மனமுவந்து அளித்தார்கள்.

மருதேந்திரர்களின் இதயத்தில் சமரசப் பேரழகு பொதிந்துள்ளது. அவர்கள் நரிக்குடியில் ஒரு மசூதியையும், சருகணியில் ஒரு மாதாகோயிலும் கட்டியுள்ளனர். மற்றும், நமது சீமையில் அவர்கள் கட்டியுள்ள சத்திரங்களும் ஊருணிகளும் ஏராளம்... ஏராளம்! இத்தகைய பேருள்ளம் படைத்த பெரியோர்களிடம் ஒரே ஒரு விண்ணப்பம்...

**சி. மருது :**—விண்ணப்பம் என்னவென்று புலவர் இன்னும் சொல்லவில்லையே.

**சாந்துப் புலவர் :**—தாங்கள் விரும்பும்படி ஆண்டவன் விஷயம்தான். காளையார் கோயில் திருக்கானப்பேர் என்னும் பாடல் பெற்ற ஸ்தலம் அல்லவா? அங்கே திருக்கோயில் ஒன்று உருவாக்க விழைகிறோம்.

**பெ மருது :**—அதற்கென்ன ? செய்தால் போயிற்று. வனத்தின் மத்தியில் இருக்கும் அந்த இடத்தில் சிறந்த மதில்களையும் மண்டபங்களையும் கட்டுவது மிகவும் நல்லதே. மற்ற நேரங்களில் கோயிலாகக் காட்சி யளித்தாலும், போர்க் காலங்களில் அரணாகப் பயன்படும். இல்லையா, தம்பி !

**சி. மருது :**—ஆமாம் ! அதுவும் நல்ல திட்டம்தான். சாந்தப் புலவரே ! காளையார் கோவிலின் ஆலய வேலையை இன்றே ஆரம்பித்து விடுங்கள்.

**புலவர் :**—மானாமதுரை செங்கற்களே சிறந்தவை... உரம் வாய்ந்தவையும்கூட...

**சி. மருது :**—அங்கிருந்தே வரவழைத்துக் கொள்ளலாம்.

**புலவர் :**—இன்னொன்று... கோவிலுக்குச் சொந்தமான தேர் ஒன்று...

**சி. மருது :**—செய்து கொள்ளுங்கள்; திருவாரூர் தேரைப் போன்று அழகானதாக... அதைப்போலவே வேலைப் பாடுமிக்கதாக...

**பெ. மருது :**—கோயிலுக்கருகில் நீராழி ஒன்றும் வெட்டி விடலாம்...குடிநீருக்கு வசதியாயிருக்கும்.

**சி. மருது :**— புலவரே ! **மயூரகிரிக்கோவை** பாடி மண்ணகமெங்கும் புகழ் பெற்றவர், தாங்கள். பொறுப்புக்களைத் தாங்களே ஏற்றுக் கொள்ளுங்கள். காரியங்களை விரைவில் முடித்துவிடுவோம்!

**— திரை —**

## காட்சி 16

மே, 1801—புதுக்கோட்டை
கண்ணம்மா வீடு.

[**கண்ணம்மா** கஞ்சி குடிக்க மறுக்கிருள். அவள் கணவன் கறுத்தான் சமாதானப் படுத்துகிருன். அவன் அரைகுறையான ஆங்கில உடை அணிந்திருக்கிருன்.]

**கறுத்தான்:**—இந்தா, புள்ளே! கஞ்சி குடிச்சுட்டு அப்புறம் உன் முறைப்பை வச்சுக்க!

**கண்ணம்மா:**—நான் ஒண்ணும் உங்கிட்ட கொஞ்சறதுக்கு வர்ல. நீ போ...உன் வேலையை பார்த்துகிட்டு!

**கறுத்தான்:**—அதென்னடி அப்படி சொல்றே? நான் என்ன தவறு செஞ்சுட்டேன்.

**கண்ணம்மா:**—தவறு செஞ்சா பரவாயில்லையே. காளையார் கோயிலில் இருந்த குடும்பத்தைப் புதுக்கோட்டைக்கு மாத்திட்டு தறுதலை ஆட்டம் அல்லவா, ஆடறே!

**கறுத்தான்:**—வாட்...வாட்...! நானு...!

**கண்ணம்மா:**—இல்லை. நான்தான்! மானம் மரியாத கெட்டவனை கட்டிக்கினே(ன்) பாரு, அது என் குற்றம்தான். உனக்கு எத்தனை நாள் சொல்றது. மதுரைக்குப் போய் அந்த பறங்கிப்பயலுக வாலைப் பிடிச்சுகிட்டு, அவனுக பின்னடியே துப்பாக்கி

சுமந்துகிட்டு சுத்தாதேன்னு—கேக்கிறயா ? நீ அவனுக கூலிப்பட்டாளத்திலே சேர்ந்து,' நம் தமிழ் சாதிக்கு எதிரா சண்டை போடறே! மருதய்யங்க உனக்கு சோத்தைப் போட்டு சுகத்தைக் கொடுத்து உன்னை ஆளாக்கினுங்க; காளையார் கோயிலில் உனக்கு ஒரு சிலைகூட வச்சாங்க. நீ நன்றிகெட்ட தனமா அவங்களுக்கே துரோகம் பண்றியே.

**கறுத்தான் :**—(அபிநயத்துடன்) ஏலே, இந்தா'டி! கை நிறைய பணம் கொடுக்கிறனுக, பறங்கியனுக. அதனுலே அவனுக பக்கம் சேர்ந்தேன். இதிலே தப்பு என்ன கெடக்கு...

**கண்ணம்மா :**—அட பாவி ! வெளியில் சொல்றியே... உனக்கு வெக்கம் இல்லே ? (கண் கலங்கி) உன் கட்டையிலே சீழ் இரத்தம் இருந்தா, நீ, வெள்ளைய னேடு சேர்ந்து பாஞ்சாலங் குறிச்சிக்குப் போவியா? ஊமைத்துரை ஆறு நாளிலே கட்டினராமே கோட்டை...இரத்தம் சிந்தி கட்டின அந்தக் கோட் டையை எப்படித்தான் பீரங்கி வைச்சு இடிக்க மனசு வந்தது? உன்னைப்போல ஊமைத்துரையும் தமிழர் இல்லையா? அவருக்குவந்த அவமானம் உனக் கும் எனக்கும் இல்லையா? நினைச்சாலே வயிறு பற்றி எரியுதே. கல்நெஞ்சுக்கார கயவாளிப் பயலுக கட்டபொம்மு ராசாவை கயத்தாத்துல தூக்கு போட்டவனுகளாச்சே. அந்தப் படுபாவிக பட் டாளத்திலே போய்ச் சேர்ந்து இப்படி அக்கிரமம் செய்யறியே! உனக்கு அன்போடு சொல்லிச் சொல்லி எனக்கும் வெறுத்துப் போச்சு...! எவ்

வளவுதான் சொல்றது? உனக்கு சூடு சொரணை இல்ல...வெக்கம் மானம் இல்ல...

**கறுத்தான் :—** போடி, இடியட்! நம்ம புதுக்கோட்டை ராசாவே பாஞ்சாலங்குறிச்சி பாளையத்துக்கு எதிரா வேலை செய்யருரு. உனக்கு என்னடி தெரியும்...? உலகம் போற போக்கு...

**கண்ணம்மா :—** (எரிச்சலுடன்) புதுக்கோட்டை ராசா போவா(ன்) பட்டமும் பதவியும் வரும்...ஒட்டிக்கு ரெட்டியா பணமும்வரும்...வாரிக் கொட்டிக்கலாமுன்னு. உன்னைப்போல பணத்தாசை பிடிச்சவங்களை பீரங்கி எதிரே அனுப்பிச்சுட்டு, அவன் மாளிகையிலே நிம்மதியா உட்கார்ந்திருக்கானில்ல...

**கறுத்தான் :—** (குழைவாக) பேசாம இரு, கண்ணம்மா! பாஞ்சாலங்குறிச்சி கோட்டையை இடிச்சு தரை மட்டமாக்கி, கொத்தளத்தை உழுது உப்போடு வரகு கலந்து வாரி விதைச்சுட்டோம். ஊமைத் துரை சிவகங்கைக்கு ஓடிட்டாராம். இன்னும் ரெண்டு நாளில் சிவகங்கை மேல் படையெடுக்கப் போறோம். அது முடிஞ்சதும் நமக்கு நூறு வேலி நிலம் கொடுக்கிறதா புதுக்கோட்டையாரும், வெள்ளைக்கார துரையும் சொல்லியிருக்காங்க. எப்படியும் நிலம் வந்துடும்! அப்புறம் பாரே(ன்). என் கண்ணுட்டி கண்ணம்மாவுக்கு வைரமும் தங்கமும் வாங்கிப்போட்டு சும்மா 'ஜிலு ஜிலு'ன்னு வைச்சுக்கிட மாட்டேனு?

**கண்ணம்மா :**—அடச்சே! உன் நகையும் நட்டும்...நீயே உன் தலையிலே போட்டுக்க. எனக்கு ஒரு முழக் கயிறு போதும். இனத் துரோகிக்கு வாழ்க்கைப் பட்ட எனக்கு அதைவிட வேறென்ன தண்டனை இருக்கப் போவுது.

**கறுத்தான்:**—எனக்குத் தெரியும்'டி! இப்ப அப்படி தான் சொல்லுவே! நாளைக்கு நூறு வேலி நிலத்தோட அய்யா வந்தா (நிமிர்ந்து சிரித்துக் கொண்டே) வாட்...?

**கண்ணம்மா :**—அப்பவே விஷம் வைச்சு உன்னைக் கொன்னுட்டுதான் மறுவேலை பார்ப்பேன்!

**கறுத்தான் :**—(அதிர்ச்சியுடன்) வாட்...வாட்...?

**கண்ணம்மா :**—வாட்டாவது பூட்டாவது? இந்தா பாரு! நீ தாலிகட்டின புருஷன் என்கிறதால் இந்த மட்டு மாவது விடறேன். அடுத்த தடவை, அந்தப் பறங் கியனுக பேச்சை எடுத்துகிட்டு, வீட்டுக்குள்ளாற அடி எடுத்து வச்ச...அப்புறம் நான் எல்லாவற்றை யும் மறந்திடுவே(ன்).

**கறுத்தான் :**—இடியட்! என்னடி உளர்றே?

**கண்ணம்மா :**—கடைசியா சொல்றேன்! இன்னைக்கு உன்னை ஆளாக வச்சுகிட்டு வேறொருத்தருக்கு துரோகம் பண்றவனுக... நாளைக்கு, இன்னொரு ஆளை கையிலே போட்டுகிட்டு உனக்கே ஏன் துரோகம் செய்ய மாட்டானுக! முதலைகளை நம்பி ஆற்றிலே இறங்கறே. வேண்டாம். இது நம்ம மறவ சாதிக்கு அடுக்காது!

**கறுத்தான் :**—(சினத்துடன்) முட்டாள்! நான் முதல் முதல்ல சிவகங்கை சண்டைக்குப்புறப்பட றபோது, இங்கிலீசு தெரிஞ்சவ மாதிரி புத்தி சொல்ல வந்துட்டா! டேமெட்...இடியட்...ராஸ்கோல்...!

[மூலையில் இருக்கும் ஈட்டியை எடுத்துக்கொண்டு வேகமாகப் போகிறான். கண்ணம்மா சோர்வுடன் தரையில் சாய்கிறாள்.]

**—திரை—**

## காட்சி 17

சிறுவயல்
அரண்மனை

[மருதிருவரும் ஏனையோரும் சாந்துப் புலவர் நடத்திக் கொண்டிருக்கும் காலட்சேபத்தைக் கேட்டுக் கொண்டிருக்கின்றனர்.]

**சாந்துப் புலவர் :**—இப்படியாகத்தானே சீதாபிராட்டியாரைத் தேடிக்கொண்டு, வாயு புத்திரனான ஸ்ரீ ஆஞ்சனேய மூர்த்தியானவர் ஆகாய மார்க்கமாகக் கடலைக் கடந்து தென்னிலங்காபுரியை அடைந்தார்......(இராகத்துடன்) தென்னிலங்காபுரியை அடைந்தார்...அடைந்து...

[பாஞ்சாலப் பதியில் தப்பிய **ஊமைத்துரையும்,** அவன் நண்பர்களும் கூட்டத்துள் புகுகின்றனர்.]

**ஊமைத்துரை:** — அங்கே பட்டணம் பறிபோய்க்கொண் டிருக்கிறது, மருது பாண்டியரே! நீங்கள் இங்கே பஜகோவிந்தம் பாடிக்கொண்டிருக்கிறீர்கள்.

[எல்லோரும் எழுகின்றனர்.]

**சி. மருது :** — ஆ! துரை அவர்களா? வாருங்கள்...வாருங் கள்...!(தன் அண்ணனை நோக்கி) நமது பாஞ்சாலங் குறிச்சி சிங்கம், அண்ணு!

**ஊமைத்துரை :** — ஆமாம், சின்னவரே! பாஞ்சைப் பதியின் சிங்கம்தான்; தன் சொந்த நாட்டைச் சிறு நரிகளிடம் ஒப்படைத்துவிட்டு வந்திருக்கிறது.

**சி. மருது :** — ஆ! அப்படியா?

**பெ. மருது :** — ஆச்சரியப் படாதே, தம்பி! நான் அப் போதே யூகித்தேன், இரண்டு நாட்களாகச் செய்தி வராததிலிருந்தே ஏதோ தகராறு நடந்திருக்கிற தென்று! எல்லாம் சரியாகி விட்டது! தம்பி! நாம் இன்றே போருக்குப் புறப்படுவோம். வெள்ளம் வருவதற்குள் அணை போட வேண்டும்.

**ஊமைத்துரை :** — காரியம் மிஞ்சி விட்டது, தோழரே! வெள்ளம் தலைக்குமேல் போய்க் கொண்டிருக்கிறது. வழியில் கேள்விப் பட்டோம். போரில் எனக்கு ஒத்துழைத்தால் உங்கள் மீது படையெடுக்க பறங்கியர் இரகசிய ஏற்பாடு செய்து வருகின்றன ராம். கும்பினிப்படை இன்னும் நான்கே நாளில் சிவகங்கையை எதிர்க்கலாம்.

**சி. மருது :** — தினவெடுத்துக் கொண்டிருந்த எங்கள் தோள்களுக்குச் சரியான விருந்து. ஊமைத்துரை

யாரே! உழுவலன்புடைய என் உயிர் அண்ணு! வாருங்கள், என் அருகே! நன்றிகெட்ட இனத் துரோகிகளின் கறைபடிந்த இதயங்களின் ஆழத்தைக்காணத் துடி துடிக்கும் இந்த வீரவாளின் மீது உங்கள் வலிய இரும்புக் கரங்களை வையுங்கள்! நஞ்சினும் கொடிய நாசகாலர்களைக் கூண்டோடு ஒழிக்க உறுதி பூண்போம்.

[மூவரும் வீரவாளின்மீது தங்கள் கரங்களை வைத்து சூளுரைக்கின்றனர்.]

**சி. மருது :**—நாங்கள் பிறந்த செந்தமிழ் நாடு வீரத்தின் விளைநிலம் என்பது உண்மையானுல்... எங்கள் உடலில் ஓடுவது தமிழ் இரத்தம் என்பது உண்மையானுல்... உயிரைவிட நாங்கள் மானத்தையே பெரிதும் மதிக்கிருேம் என்பது உண்மையானுல்... சுதந்திரம் தமிழ்ப் பெரு மக்களின் பிறப்புரிமை என்பது உண்மையானுல்... தமிழகமே...!எங்கள் தாயகமே...!நாங்கள் கொள்ளைக்குணம் படைத்த வெள்ளைக்காரர்களை ஒழித்துக் கட்டுவோம்...! அவர்கள் காலடி படாமல் தமிழ் மண்ணைப் பாதுகாப்போம்! தவறினுல், இனத்தைக் காட்டிக் கொடுக்கும் தறுதலைகளால் நாங்கள் வீழ்ச்சியுற்ருல், எங்கள் உயிரையே உன் திருவடிக்குக் காணிக்கையாகத் தருவோம். இது உறுதி...

**பெ. மருது :**—உறுதி...!

**ஊமைத்துரை :**—உறுதி...! உறுதி...!

**அவையோர் :**—உறுதி...! உறுதி...! உறுதி...!!

[அனைவரும் தத்தம் வாளையுருவி உயர்த்தி நிற்கின்றனர்.]

— திரை —

## காட்சி 18

பழமனேரி ஆற்றங்கரையில்
கமுதிக் கோட்டை——போர் முகாம்.

[கர்னல் அக்நியுவும், கர்னல் வெல்ஷும்.]

**அக்நியு** :—மிஸ்டர் வெல்ஷ் ! என்ன சிலையாக அமர்ந்து விட்டீர்? உயிருக்கு உயிரான தோழர்களான மருது பாண்டியர்மீது போர் தொடுக்க வேண்டியிருக்கிறதே, என்று ?

**வெல்ஷ்** :—இல்லை. அதற்காக இல்லை ! அவர்களை விரைவில் வீழ்த்துவதற்கான வழி முறைகளைச் சிந்திக்கிறேன்.

**அக்நியு** :—மறைக்காதீர், தோழரே ! முகத்தில் படிந்திருக்கும் சஞ்சல ரேகைகளைப் பார்த்தாலே தெரிகிறதே, அகத்தில் ஏதோ ஆகாத எண்ணங்கள் அமிழ்ந்திருக்கின்றன என்பது...

**வெல்ஷ்** :—நன்றி யுணர்ச்சியால் கடமையைச் செய்யத் தவறி விடுவேனோ என்று சந்தேகிக்கிறீர்களா, கர்னல் !

**அக்நியு** :– இல்லை ஆனால், நீ ஓர் கிழக்கிந்தியக் கம்பெனியைச் சேர்ந்தவன்... கிடைத்திருக்கும் நல்ல

பதவியை இழந்துவிடக் கூடாதவன் என்பதை உமக்கு நான் ஞாபகப் படுத்தலாம், அல்லவா?

**வெல்ஷ்** :—ஓ, தாராளமாக! நான் என் நிலைமையையும் கடமையையும் மறந்துவிட்டால் கவனப் படுத்தலாம். ஆனால், நான் இன்னும் என்னையே மறந்துவிடும் முட்டாளாக வில்லை.

**அக்நியு** :—சபாஷ்! அதுதான் சரி! ஏனென்றால், சொந்த வாழ்க்கை வேறு... அரசியல் வாழ்க்கை வேறு...!

**வெல்ஷ்** :—சிறுவயலுக்கு நான் பல தடவைகள் போயிருக்கிறேன். அழகிய சிறு நகரம் அது. அதை முதலில் பிடித்துவிட்டால், பிறகு போரே முடிந்த மாதிரிதான்.

**அக்நியு** :—எப்படிப் பிடிப்பது? முதலில் நடந்த சண்டையில் முப்பது வெள்ளைத் தளபதிகளையும், மூந்நூறு கூலிப் படைஞர்களையும் பலி கொடுத்திருக்கிறோம். அன்றைய பொழுது விடிவதற்குள் நாம் இராமநாதபுரத்திற்கு ஓடியிருக்காவிட்டால், மூன்று நம் இருவர் பிணங்களும் அழுகிப் போய் இருக்கும்; அவற்றின்மீது காகமும் கழுகும் வட்டமிட்டுக்கொண்டிருக்கும்.

**வெல்ஷ்** :—இருங்கள். அதற்கு வழி ஒன்று இருக்கிறது! புதுக்கோட்டை தொண்டைமானுக்கு ஆள் அனுப்பியுள்ளேன். அவர் வந்ததும்...

[தொண்டைமானும், கறுத்தானும் வருகின்றனர்.]

**தொண்டைமான்** :—வணக்கம்...!

**அக்நியு** :—வாருங்கள் ! சிறுவயலைக் கவிழ்ப்பதற்காகத் திட்டம் வகுத்துக்கொண்டிருக்கிறோம்.

**தொண்டைமான்** :—பயனுள்ள திட்டம்...!

**வெல்ஷ்** :—உம்மால் பாதி நடக்கவேண்டும்.

**தொண்டைமான்** :—சொல்லுங்கள் ! மருது பாண்டியர் ஒழிவதாயிருந்தால் என் உயிரையும் தருவேன் !

**அக்நியு** :—வேண்டாம்... வேண்டாம் ! உபயோகமற்றதை வாங்கி நாங்கள் என்ன செய்யப்போகிறோம்.

**தொண்டைமான்** :—நீங்கள் எதைக் கேட்கிறீர்கள் ? என் பரம்பரைப் பகைவரை அழிக்க எது வேண்டுமானாலும் கொடுக்கிறேன்.

**வெல்ஷ்** :—சிறுவயலுக்கு அருகில் உள்ள பலம் வாய்ந்த கோட்டை...

**தொண்டைமான்** :—திருமயம்...! என் ஆதிக்கத்தில் இருக்கிறது.

**அக்நியு** :—ஆம்... அதுதான் வேண்டும் !

**கறுத்தான்** :—அது நல்ல கோட்டைங்க. திருமயத்தில் நம்ம படைகள் தங்கி இளைப்பாற வசதியா இருக்கும். அங்கிருந்து சுலபமா கமுதிக்கு வரலாம்... சிறுவயலைத் தாக்கலாம்...

**வெல்ஷ்** :—என்ன, மிஸ்டர் புதுக்கோட்டை...!

**தொண்டைமான்**:—துரையவர்கள் சொல்லிவிட்ட பிறகு, நான் சொல்ல என்ன இருக்கிறது? இன்று முதல் திருமயம் கோட்டையை நீங்களே பயன்படுத்திக் கொள்ளுங்கள்.

**அக்நியு :**—வாயால் சொன்னால் போதுமா? காற்றில் போய்விடுமே......! இதோ......உரிமை சாசனத்தில் கையொப்பமிடுங்கள்.

**வெல்ஷ் :**—என்ன தயங்குகிறீர்கள்...?

**தொண்டைமான் :**—ம்...ம்...ஒன்றுமில்லை......

(கையொப்பமிடுகிறான்.)

**தொண்டைமான் :**—ம்......எட்டயபுரத்தாரைக் கேட்டால்கூட ஏதாவது உதவி செய்வார்...

**அக்நியு :**—நல்ல சமயத்தில் ஞாபகப் படுத்தினீர். ஓய், கறுத்தான்!

**கறுத்தான் :**—சார்!

**அக்நியு :**—எட்டயபுரத்தாரிடம் சென்று மூவாயிரம் தமிழ் வீரர்களை நமக்குப் பக்க பலமாக அனுப்பச் சொல்.

[கறுத்தான் ஆங்கிலமுறையில் வணங்கிவிட்டு போகிறான்.]

**வெல்ஷ் :**—இன்னும் எட்டு நாட்களில் சிறுவயலைப் பிடித்துவிட வேண்டும்.

**தொண்டைமான் :**—அந்தச் சண்டாளன் ஊமைத்துரை கூட அங்கேதான் இருக்கிறானும். செய்தி வந்தது!

**அக்நியு :**—சதிகாரன்! பாதாளத்தில் ஓடி ஒளிந்தாலும்; பூமியைப் பிளந்தாவது அவனை ஒழிக்காமல் விடப் போவதில்லை.

— **திரை** —

## காட்சி 19

காளையார் கோவில்
பாடி வீடு

[மருது சகோதரர், ஊமைத்துரை, முத்தய்யன், துரைசாமி முதலியோர் ]

**துரைசாமி** :—மடையன் !

**பெ. மருது** :—மூர்க்கன்...!

**ஊமைத்துரை** :—முட்டாள் ! என்ன திமிர், அவனுக்கு? கட்டபொம்மனைக் காட்டிக் கொடுத்தான்; கூலிப் படைகளைக் கும்பினியாருக்கு ஒத்தாசையாக அனுப்பினான்; இவை போதாது என்று இப்போது முக்கியமான திருமயம் கோட்டையையும் வெள்ளையரிடம் ஒப்படைத்துவிட்டான் !

**சி மருது** :—அவன் உதவி இல்லையென்றால், நாம் சிறுவயலை இழந்திருக்க மாட்டோம்.

**முத்தய்யன்** :—சிறுவயலைப்பற்றி நினைக்கும்போதே நெஞ்சம் கலங்குதுங்க. அழகான வீடுகளும், அகன்ற வீதிகளும், அங்கே செழித்து வளர்ந்திருந்த சோலைகளும், அரண்மனைகளும்... அய்யோ...நம் கையாலேயே நெருப்பு வைச்சு அழிச்சுட்டோமே. இந்த துர்ப்பாக்கியமான நிலை நமக்கு வருமுன்னு நினைக்கவே யில்லைங்க. மறுபடியும் அதைப் போல ஒரு அழகான நகரத்தை எந்த ஜென்மத்திலே பார்க்கப் போறோம்...

**பெ. மருது** :—போகட்டும், முத்தய்யா ! நாம் நினைத்தால் அதைப்போன்ற ஆயிரம் ஊர்களைக் கட்டிக் கொள்ள முடியும்.

**முத்தய்யன்** :—எனக்கென்னவோ ஆத்திரத்தை அடக்க முடியலீங்க...

**துரைசாமி** :—எனக்குச்கூட ஒரே கோபமா இருக்கு, அப்பா ! அந்த புதுக்கோட்டையானையும், எட்டய புரத்தானையும் முதல்ல ஒழிக்கணும். என்னை அனுப்புங்க, அப்பா ! அவனுக இரண்டு பேரையும் கொன்னுட்டு வர்றேன்.

**சி. மருது** :—உனக்கு வயசு ஏழுதானேடா ஆச்சு...? நீ வேண்டாமடா, கண்ணு ! நீ இரு, நானே போய் வருகிறேன்.

**ஊமைத்துரை** :—பகைவரின் பாசறைக்குச் செல்கிறீர்கள்; பக்குவமுடன் நடந்துகொள்ளுங்கள்.

**சி. மருது** :—நான் பார்த்துக்கொள்கிறேன் ! முத்தய்யா ! குதிரைகளைத் தயார் செய்.

**துரைசாமி** :—நான்கூட வர்றேம்பா !

**பெ. மருது** :—அவனையும் அழைத்துச் செல், தம்பி !

**முத்தய்யன்** :—தம்பி ரொம்பவும் சின்னவருங்க.

**சி. மருது** :—இருக்கட்டுமே ! புலிக்குப் பிறந்தது பூனையாகிவிடாது. துரைசாமி !

**துரைசாமி** :—என்னப்பா !

**சி. மருது** :—நீயும் வா ! புதுக்கோட்டையனுக்குப் புதியதோர் பாடம் கற்பிப்போம்

[இருவரும் புறப்படுகின்றனர். ஊமைத் துரையும், பெரிய மருதும் துரைசாமியின் நெற்றியில் முத்தமிட்டு அனுப்புகின்றனர்.]

**ஊமைத்துரை** :—நாங்கள் இங்கே போருக்கான வேலைகளைக் கவனித்துக்கொள்கிறோம். நீங்கள் மானங் கெட்ட அந்த மடையர்களுக்குச் சரியான பாடம் புகட்டிவிட்டு வாருங்கள்.

[இருவரும் புரவிமீதேறிப் போகின்றனர்! பெரிய மருது அவர்கள் சற்று தொலைவு நடந்து செல்கிறார்.]

— திரை —

## காட்சி 20

புதுக்கோட்டை அருகில் ஒரு சாலை.

[சின்ன மருதுவும், அவன் மகன் துரைசாமியும் குதிரை மீதிருந்து இறங்கி, சாமியாரைப் போல வேடமிட்டுக்கொள்கின்றனர்.]

**சி. மருது** :—கட்டுக் காவல்களை மீறிப் புதுக்கோட்டையான் அரண்மனைக்குள் நுழைய அற்புதமான வேடம்! எப்படி, சிஷ்யா!

**துரைசாமி** :— (சீடனைப்போல) அற்புதம் குருஜீ! வேஷம் அற்புதத்திலும் அற்புதம்!!

**சி. மருது** :—புறப்படலாமா?

**துரைசாமி** :—தங்கள் சித்தம், சுவாமி!

[இருவரும் சிரித்துக்கொண்டே செல்கின்றனர்.]

— திரை —

## காட்சி 21

புதுக்கோட்டை
மன்னன் மனை.

[ஆங்கில உடையில் இருக்கிறார்கள் கறுத்தானும், தொண்டைமானும்! பஞ்சணையில் சாய்ந்து கொண்டிருக்கும் தொண்டைமானுக்கு மயில் விசிறி கொண்டு வீசுகிறான், கறுத்தான்!]

**தொண்டைமான்** :—கறுத்தான்...!

**கறுத்தான்** :—வாட், சார்...?

**தொண்டைமான்** :—புலி ஒன்று ஆட்டைக் கடித்து மாட்டைக்கடித்து கடைசியில் தன்னை வளர்த்த மனிதனையே கடித்த கதை ஒன்று கேட்டிருக்கிறாயா?

**கறுத்தான்** :—ஆமாம்!

**தொண்டை** :—அந்த வழிக்கு வந்துவிட்டார்களடா, வெள்ளைக்காரர்கள்!

**கறுத்** :—வாட்...வாட்...?

**தொண்டை** :—கடன்காரப் பயக! கொஞ்சம் கொஞ்ச மாக நாட்டை ஆக்கிரமிச்சுட்டானுக......! அன்று 'திருமயம்' கோட்டையை அவர்களுக்கு விடுவதாகச் சொன்னேன். என் பேச்சில் நம்பிக்கை யில்லாமல் கையெழுத்துப் போடும்படி கட்டாயப்படுத்தினார்கள்...

**கறுத்தான்** :—நீங்க என்ன, சார்! இதிலே நம்பிக்கை அவநம்பிக்கைன்னு என்னங்க கிடக்குது? எதுக்கும் எழுத்து மூலம் இருந்துட்டா நல்லது இல்லைங்களா?

**தொண்டை** :—ஏலே...சும்மா கிடடா! ஏது, நீயே அவனுக்கு வக்காலத்து வாங்குகிறாய்? ஓஹோ... பணம் படுத்துதா...?

**கறுத்** :—வாட்...வாட்...?

**தொண்டை** :—அடச் சீ! என் மனசு வேதனையா கெடக்குது...! நீ வேறு 'வாட்டு...வாட்டு'ன்னு என் உயிரை வாட்டுகிறாய்?

[நீண்ட அங்கி அணிந்த ஒரு முனிவரும், ஒரு சிறுவனும் வருகின்றனர்,! சின்ன மருதுவும், துரைசாமியும்.]

**முனிவர்** :—கெடுவான்...

**துரைசாமி** :—கேடு நினைப்பான்!

**முனிவர்** :—மற்றவர்களை ஒரு காலத்தில் வாட்டியவன்...

**துரைசாமி** :—தானும் ஒரு காலத்தில் வாடுவான்!

**தொண்டை** :—(அதிகாரத்துடன்) யார் நீங்கள்? வறட்டு வேதாந்திகளுக்கு இங்கு என்ன வேலை...?

**முனிவர்** :—(அமர்ந்து) வறட்டு வேதாந்தமல்ல, மகனே! கோணல் புத்தியுள்ள ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்வில் காணும் உண்மை...

**கறுத்** :—வாட்... வாட்...?

**தொண்டை** :—ஏது சாமியாரெல்லாம் வாழ்க்கையைப் பற்றிப் பேச ஆரம்பிச்சுட்டிங்க...

**முனிவர்** :—மனிதனாக வாழவேண்டியவர்கள் மிருகமாக மாறிவிட்டபோது... சத்தியத்திற்குப் பாடுபடுபவன் கூட சாமியார் வேஷம் போட வேண்டியிருக்கிறது...!

**கறுத்** :—சார்! என்னவோ தெரியல. சிக்கல் முளைக்குது!

**தொண்டை** :—சிக்கலாவது? செங்கல்லாவது...? ஓய்... நீர் யார்?

**துரைசாமி** :—யார் என்று சொன்னால் பயந்துவிடமாட்டாயே...?

**கறுத்** :—ஆஹா! நீ...டா சிங்கம்!

**துரைசாமி** :—அப்படியானால் அஞ்சாமல் கேள்! மான மற்றவர்களே! மானத்திற்காகப் போராடும் மருது பாண்டியரைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா...?

**கறுத்** :—(நடுக்கத்துடன்) ஆங்... யாரு...ம...மா...ம...மா...மா...

**தொண்டை** :—அட, சீ! சும்மா கிட! மாமாவாவது... அத்தையாவது? ஏய், பரதேசிகளே! எங்கே வந்தீர்கள்?

**முனிவர் :**—பரதேசிகளுக்கு நீங்கள் பாதுகாப்பு அளிப்ப தாகக் கேள்விப்பட்டு வந்தோம்.

**தொண்டை :**—எத்தனே ! எழுந்திரு, இந்த இடத்தை விட்டு! புதுக்கோட்டை சமஸ்தானத்தைச் சோறு போடும் சத்திரம் என்று எண்ணிக்கொண்டாய் ?

**முனிவர் :**—புதுக்கோட்டை மன்னரே ஆங்கிலேயரின் கைப்பாவை யாகிவிட்டார் என்றால், சமஸ்தானம் சத்திரமாவதில் வியப்பு ஒன்றும் இல்லையே...?

**தொண்டை :**—திமிர் பிடித்தவனே ! ஏதாவது பேசினால் உன் நாக்கை அறுத்துவிடுவேன்.

**முனிவர் :**—கூர்மையில்லாத கத்தியை வைத்துக்கொண்டு ஏனடா கூத்தாடுகிறாய் ? ஆர்க்காட்டு நவாபிடம் சொல்...அவன் நம்புவான் உன் வீரத்தை !

**கறுத் :**—அரசே ! இவன் உண்மை சாமியார் அல்ல... யாரோ போலி சாமியார் !

**தொண்டை :**—விவேகமற்றவனே ! உன் வேஷத்தைக் கலைத்துவிட்டு என்னிடம் வார்த்தையாடு, பார்க்க லாம் !

**முனிவர் :**—புதுக்கோட்டை ! உனக்கு சின்ன மருது தெரியுமா ?

**தொண்டை :**—காளையார்கோவில் காட்டுக்குள் பதுங்கிக் கிடக்கும் அந்த சின்னபுத்திக்காரனை நான் தெரிந்து கொள்ளவேண்டாம்.

**முனிவர் :**—ஏன் ? அவனை நினைத்தாலே உடம்பு நடுங்கு கிறதோ... ? கறுத்தானைக் கேள்... அவன் சொல்

வான், மருது சகோதரர்களின் மானமுள்ள வாழ்வைப் பற்றி...!

**கறுத்தான் :**—பூ...! வாயை மூடிக்கிட, சாமியாரே! மருது என்றால் பெரியமலேன்னு நினைச்சுட்டியா? எனக்குத் தெரியும், அவர்களுடைய வண்டவாளம்!

**துரைசாமி :**—என்ன சொன்னாய்? நன்றி கெட்டவனே!

[‘பளார்’ என்று அறைகிறான். கறுத்தான் அதிர்ச்சி யடைகிறான்.]

**முனிவர் :**—மருது இப்போது உங்கள் எதிரில் வந்தால் என்ன செய்வீர்கள்?

**தொண்டை :**—என் வாளால் அவனைத் துண்டு துண்டாக வெட்டி வீழ்த்துவேன்.

[வாளை உருவுகிறான். முனிவர் வேடம் கலைகிறது. சின்ன மருது தோற்றமளிக்கிறான். தொண்டைமானின் கை நடுங்குகிறது; கறுத்தான் சிலையாக நிற்கிறான்.]

**சி. மருது :**—நடுங்க வேண்டாம், நண்பா! உனக்கு நல்ல முறையில் சொல்லிவிட்டுப் போகவே வந்தோம். நீயும் எட்டயபுரத்தானும் ஒத்துழைக்காவிட்டால், எங்கள் சிறுவயல் அரண்மனையைக் கும்பினியாரால் கைப்பற்றியிருக்க முடியாது. இங்கே பார்! உங்களுக்கும் எங்களுக்கும் ஆயிரம் பூசல் இருக்கலாம்; விரோதம் இருக்கலாம். இது நம் குடும்பச் சண்டை! இதில் மற்றவரை நுழைய விடக் கூடாது. எங்கள்மீது உள்ள காழ்ப்பு காரணமாக, வெள்ளையருக்கு உதவுவது, அடுத்

தவன் கையைக் கொண்டு நம் கண்ணைக் குத்திக் கொள்வதைப் போலாகும். உன் போக்கால் நமது நாடு எந்த நிலையடையும் என்பதை எண்ணிப் பார்!

**தொண்டை :**—அந்தக் கவலை எனக்கில்லை. நீர் வந்த விஷயத்தைச் சொல்லலாம்.

**சி. மருது :**—நீ வெள்ளையர் துணைகொண்டு எங்களை அழித்துவிடுவாய் என்ற பயத்தால் அல்ல... களங்கமில்லாத் தென்பாண்டி நாட்டு மக்கள் எதிர் காலத்தில் கண்ணீரும் கம்பலையுமாக வாழ்விழந்து தவிக்கக் கூடாது என்ற காரணத்தால், உன்னை ஒன்று கேட்டுக்கொள்கிறேன்.

**தொண்டை :**—என்ன...?

**சி. மருது :**—இனிமேலாவது பறங்கியருக்கு உணவும் படையும் கொடுத்து உதவாதே! எங்களுக்கும் உன் ஒத்துழைப்பு வேண்டாம். யாருக்குமே உதவாமல் நீ நடுநிலையாக இருக்கவேண்டும்.

**தொண்டை :**—அது முடியாத காரியம். எனக்கு ஒரு கண் போனாலும் பாதகமில்லை. என் விரோதியின் இரு கண்களும் அழியவேண்டும்.

**சி. மருது** —புதுக்கோட்டையானே! உன் பரம்பரை வழிவழியாக நாட்டைக் காட்டிக் கொடுக்கும் இழிசெயலில் இறங்கி, அகற்ற முடியாத பழியைச் சுமந்துகொண்டிருக்கிறது. இந்த அவல நிலை உன்னோடாவது நிற்கட்டும்! நீயும் பாவம் செய்து உன் குலத்திற்குக் கொடும்பழி தேடிவைத்து விடாதே. பிற்காலத்தில், உலவப்போகும் உன் சந்ததியாரைத் தமிழகத்தின் மத்தியில் தலை குனிய

வைத்துவிடாதே. 'புதுக்கோட்டை தொண்டை மானின் வமிசத்தில் வந்தவர்கள்' என்று அவர்கள் வெளியில் சொல்லக்கூட வெட்கப்படும்படியான துர்ப்பாக்கியமான நிலைக்கு அவர்களை ஆளாக்காதே. நீ உன் சொந்த நலனுக்காகச் செய்யும் துரோகச்செயல்,பல்லாண்டு பல்லாண்டுக் காலமாக உன் பரம்பரைமீது அழிக்க முடியாத கறையாகப் படிந்திருக்கும்.

**தொண்டை** :—சின்ன மருது! போதும், நிறுத்து! மகா யோக்கியனைப்போல பேசுகிறாய். நீங்கள் செய்வது மட்டும் சொந்த நலத்திற்கு இல்லையா? போரில் நாம் இறந்தாலும் பரவாயில்லை; நம் சந்ததியாராவது சுதந்திர வீரர்களான மருது பாண்டியரின் வழித் தோன்றல்கள் நாங்கள்'' என்று வறட்டு ஜம்பம் அடித்துக் கொள்ளட்டும் என்ற உள் நோக்கத்தால் தானே நீங்கள் இவ்வளவு துணிச்சலுடன் போரிடுகிறீர்கள்? உன் மனதைத் தொட்டுச் சொல்,மருது! எதிர்காலத்தில், நமது பெயரைச் சொல்லியாவது நம் மக்கள் செல்வாக்குப் பெற்று வயிறு வளர்க்கட்டும் என்று நீ எண்ணுகிறாய், இல்லையா?

**சி. மருது** :—சீ, அற்ப புத்தியுடையவனே! நான் மானத்தைப்பற்றிப் பேசுகிறேன். நீ சோற்றைப்பற்றியும் சுகத்தைப்பற்றியும் பேசுகிறாய்.

**தொண்டை** :—வாழத் தெரிந்தவன், நான்! உங்களைப் போல 'மானம்... மதிப்பு' என்ற சொற்களால் வாழ்க்கையைக் குழப்பிக் கொள்ளும் மடையனல்ல!

**சி. மருது** :—ஆஹா... அருமையான சித்தாந்தம்! வெளி யில் சொல்லாதே... விவேகமுள்ளவர்கள் உன் முகத்தில் காறித் துப்புவார்கள்.

**தொண்டை** :—சிங்கத்தின் குகைக்குள் நுழைந்ததுமல்லாமல், குறை வேறு கூறுகிறாயா? எங்கே, எடு உன் வாளை...

[தொண்டைமானும், கறுத்தானும் வாட்களை உருவுகின்றனர். சின்ன மருது சிரித்துக் கொண்டே நிற்கிறான். திடீரென்று பெரிய மருது உள்ளே நுழைகிறான். தொண்டைமானை நோக்கி...]

**பெ. மருது** :—(அலட்சியமாக) உருவிய வாளைப் போடு தம்பி, உன் உறையில்!

[இருவர் வாட்களும் நழுவிக் கீழே விழுகின்றன.]

புதுக்கோட்டையாருக்குக்கூட வீரம் வந்து விட்டதே! அதுவும் உடைவாளை உருவும் அளவுக்கு! ஒருவேளை மருதுவின் சேவகன் கறுத்தானின் காற்று உன்மீது பட்டுவிட்டதோ......! என்ன தொண்டைமான் பேசாமல் நிற்கிறாய்?

[கறுத்தான் அருகில் சென்று தட்டிக் கொடுக்கிறான்.]

கறுத்தான்! இனத் துரோகமே உருவான தொண்டைமான்தான் நாங்கள் விரோதிகளாயிற்றே என்று வாய் திறந்து பேச முடியாத ஊமையாகி

விட்டார். ஒரு காலத்தில் நீ எங்கள் உயிர்த் தோழ ஞக இருந்தவன்தானே ? நீ ஏனடா ஏதும் தெரியா தவனைப் போல நிற்கிருய்...?

[கறுத்தான் தலை நிமிரவே யில்லை.]

சி. மருது :—என்ன, புதுக்கோட்டை ! சற்று நேரத் திற்கு முன்பு சீறி எழுந்தாய் ; இப்போது பெட்டிப் பாம்பாக அடங்கி விட்டாயே, ஏன் ? தன்னந் தனி யாக நிற்கும் உன்னைக் கொன்று விடுவோம் என்று அஞ்சுகிருயா ? பயப்படாதே ! அவ்வளவு இழி குணம் எங்களுக்கு இல்லை.

[இருவரும் தலை குனிந்து நடுக்கத்துடன் நிற்கிருர்கள்.]

பெ. மருது :—புதுக்கோட்டையானே ! கவனமாகக் கேட்டுக்கொள். கடைசி தடவையாக எச்சரிக் கிருேம். பறங்கியருக்கு நீ மேலும் படை கொடுத்து உதவிஞல், துரோகச் செயலை நீ தொடர்ந்து செய்து கொண்டே வந்தால்... உன் பரம்பரையை ஒழித்து விடுவோம் ! புதுக்கோட்டையே இருந்த இடம் தெரியாமல் பாழாக்கிவிடுவோம். எங்கள் இரும்புக் கரங்களில் தீப்பந்தங்களை ஏந்தி வந்து, தீயவர் வீடு ஒன்றைக் கூட பாக்கி வைக்க மாட்டோம். உங் கள் பண்பாடற்ற நெஞ்சங்களைத் தீய்த்துவிட்டே ஓய்வோம் ! ஜாக்கிரதை ! சீரான சுதந்திர நாடு... அல்லது சிதைந்து போன சொந்த வீடு...! இதில் எது வேண்டுமோ அதை நீயே தேர்ந்தெடுத்துக் கொள். நாங்கள் வருகிருேம் !

[மாயமாய் மறைகின்றனர், அவர்கள். வியர்த்துக் கொட்டும் உடலுடன் தொண்டைமான் பஞ்சணையில் சாய்கிறன். கறுத்தான் விசிறி எடுத்து அவனுக்கு விசிற, அவன் வெறுப்புடன் விசிறியைப் பிடுங்கி வீசி எறிகிறன். அவன் அடிவயிற்றிலிருந்து நீண்டதோர் நெட்டுயிர்ப்பு வெளிப்படுகிறது. கறுத்தான் விசிறியை எடுத்துத் தனக்கு விசிறிக்கொள்கிருன்.]

— திரை —

## காட்சி 22

புதுக்கோட்டை
கர்னல் பிளாக்பர்ன் தங்கும் வீடு.

[பிளாக்பர்ன், தொண்டைமான், கறுத்தான் முதலியோர்.]

**தொண்டைமான் :**—உண்மைதான், பிரபு ! பெரிய மருது பேச்சை நிறுத்தினன். பேய்மழை பெய்துவிட்டதைப்போல இருந்தது.

**கறுத்தான் :**—ஆமாம், சார் ! இங்கேயே வந்து ஒரு உலுக்கு உலுக்கிவிட்டார்கள். நாங்க இரண்டு பேரும் ஆடி அசந்து விட்டோம்.

**பிளாக்பர்ன் :**— ..ம்... ஆச்சரியந்தான் !

**தொண்டை :**—எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. போரின் முடிவு எப்படியிருக்குமோ......அதற்குள்

நான் என் கல்யாணத்தை முடித்துக்கொள்கிறேனே !

**பிளாக் :**—அது முட்டாள்தனம்! மருது பாண்டியரை ஒழிக்கும் வரை கல்யாணமே செய்து கொள்வதில்லை என்று உறுதி எடுத்துக் கொள்ளுங்கள். அவர்களை அடக்கம் செய்த சமாதியின் மீது 'ஜாம்... ஜாம் என்று பிரமாதமாக திருமணம் நடத்திக் கொள்ளலாம்...!

**கறுத் :**—வாட்...வாட்...? பிணத்தின் மேல் கல்யாணமா? அய்யய்யோ......

**தொண்டை :**—முட்டாள் ! எங்கு நடந்தால் என்ன ? மொத்தத்தில் மருதுபயலுக ஒழியணும்...

**பிளாக் :**—ஆங்...... அதுதான் புத்திசாலித்தனம் ! ஆமா(ம்)... சிவகங்கைச் சீமையில் அவர்களுக்கு விரோதமாக ஒருவர்கூட இல்லையா ?

**கறுத் :**—இருக்கிறாருங்க...! படமாத்தூர் கௌரி வல்லப பெரிய உடையணத் தேவர் என்று ஒருத்தர் இருக்கிறார். சிவகங்கையை அவரே ஆளவேண்டும் என்ற பேரவா அவருக்கு !

**பிளாக் :**—அப்படியா, கறுத்தா ! நீ சென்று அவரை, காளையார் கோவில் காட்டில் பாதை அமைத்துக் கொண்டிருக்கும் கர்னல் அக்நியுவிடம் அழைத்துப் போ...! இதோ... உன் செலவுக்குப் பணம் இரு நூறு பொன்...

[பொன்னைப் பெற்றுக் கொண்டு, மலர்ந்த முகத்துடன் செல்கிறான், கறுத் தான்]

**பிளாக் :**—(தொண்டைமானை நோக்கி) மலை பிளவு படுகிறது மிஸ்டர் புதுக்கோட்டை ! இனி சுலபத்தில் தூள் தூளாக்கி விடலாம்.

— திரை —

## காட்சி 23

29 ஆகஸ்டு 1801
காளையார் கோயில் காடு
கம்பெனி முகாம்

[கர்னல் அக்நியு, கர்னல் வெல்ஷ் இருவரும் அமர்ந்துள்ளனர்.]

**வெல்ஷ் :**—கர்னல், சார் ! ஒரு மாத காலமாக முயற்சிக்கிறோம். தினமும் ஆயிரக்கணக்கான சிப்பாய்கள் வேலை செய்தும்கூட நான்கு மைல் தூரம் காட்டை அழித்துப் பாதைபோட முடியவில்லையே! காளையார் கோயில் இன்னும் நான்கு மைல் இருக்கிறதே !

**அக்நியு :**—ஆமாம் ! இந்தக் காட்டின் மத்தியில் ஒவ்வொரு இரவும் ஒவ்வொரு யுகமாக இருக்கிறது.

**வெல்ஷ் :**—நேற்றிரவுகூட மறவர் ஆட்கள் மூன்று கூடாரங்களைக் கொளுத்திவிட்டார்கள். இன்று காலை தண்ணீர் குடிப்பதற்கு ஓடைப்பக்கம் சென்ற முந்நூறு வீரர்கள் என்ன ஆனார்கள் என்றே தெரியவில்லை. தேடிப் பார்ப்பதற்கு இரண்டு தளபதிகளை அனுப்பினேன். அவர்கள் காணமற்போனவர்களின்

முப்பது தலைகளையும், ஐம்பது முண்டங்களையும் கொண்டுவந்தார்கள்.

**அக்நியு :**—உஸ்... அதையெல்லாம் என் காதில் போட்டு, என்னை வேறு குழப்பத்திற்கு ஆளாக்காதீர்கள். காட்டை அழித்துப் பாதை போடுவதும், காளையார் கோயிலைப் பிடித்து மருது பாண்டியரைக் கைது செய்வதும் கனவிலும் முடியாத காரியங்கள்...

**வெல்ஷ் :**—நமது படையிலும் பலத்த நஷ்டம். இரத்த பேதியாலும் வயிற்றுப் போக்காலும் இறப்பவர்களின் எண்ணிக்கை அதிகமாகிக்கொண்டே போகிறது.

**அக்நியு :**—ரோடு போடுவதை நாளையோடு நிறுத்திவிடலாம். அதுபற்றிக் கவர்னருக்கும் கடிதம் எழுதியிருக்கிறேன்.

[எழுதிய கடிதத்தைப் படிக்கிறான்.]

“காளையார் கோவிலைச் சுற்றி முப்பது கல் விஸ்தீரணத்திற்கு அடர்ந்த காடு. ஆகாய மளாவி நிற்கும் மரங்களை அழித்துச் சிறு வயலிலிருந்து போடப்பட்ட பாதையின் முயற்சி நாளையோடு கைவிடப்படும். காரணம்... கம்பெனிப் படையில் ஏராளமான நஷ்டம். எதிரிகள் இரவு நேரங்களில் திடீர் திடீரென்று தாக்கித் தொல்லை தருகின்றனர். உயர்ந்த மரங்களிலிருந்தும், அடர்ந்த புதர்களிலிருந்தும் தீப்பந்தங்கள் பறந்து வருகின்றன. எதிரிகள் எந்த இடத்தில் மறைந்து கொண்டு, தீப்பந்தங்களையும் கவண்கற்களையும் எறிகிறார்கள்

என்றே தெரியவில்லை. திரும்பத்திரும்ப ஏற்பட்ட தோல்வியால் நம் படைவீரர்கள் சோர்வடைந்து விட்டனர்.

"புரட்சிக்காரர்களை அடக்கி வெற்றி பெறுவோம் என்று எதிர்பார்க்க முடியவில்லை. ஆகவே, நாளை ஒக்கூர் அருகில் உள்ள சோழபுரம் செல்ல முடிவு கட்டவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுள்ளது......"

**அக்நியு** :—செய்தி போதுமா, மிஸ்டர் வெல்ஷ்!

**வெல்ஷ்** :—போதும். ஆனால், இதை அனுப்புவது எப்படி? இதற்கு முன்பு அனுப்பிய செய்திகளும் போய்ச் சேராத வண்ணம் புரட்சிக்காரர்கள் வழியில் மடக்கிவிட்டனர்.

**அக்நியு** :—இப்போது தக்க ஆளாகப் பார்த்து அனுப்புவோம்!

[படமாத்தூர் உடையணத் தேவன், அவன் தமையன், ஒரு வேதியன் ஆகிய மூவரையும் கறுத்தான் அழைத்து வருகிறன். ஒருவர்க் கொருவர் அறிமுகம் செய்து கொள்கின்றனர்.]

**கறுத்தான்** :—இவர் படமாத்தூர் கௌரிவல்லப பெரிய உடையணத்தேவர்...!

**தமையன்** :—நான் அவருடைய அண்ணன்!

**அக்நியு** :—இவர் யார்? வேடிக்கையான மனிதராக இருக்கிறரே?

**தேவர்** :—எங்கள் ஊர் புரோகிதர்!

**வெல்ஷ் :**—எங்கே வந்தீர்கள் ?

**கறுத் :**—கர்னல் பிளாக்பர்ன் அனுப்பிவைத்தார். இதோ ...தேவருக்கு சிவகங்கைச் சீமையில் பங்கு உண்டு. ஆனால், மருது பாண்டியர் இவருக்கு ஜமீனில் பாகமே இல்லையென்று மறுக்கின்றனர்.

**அக்நியு :**—(வேதியரைப் பார்த்து) உண்மையாகவா...?

**வேதியர் :**—அதென்ன, அப்படிக் கேக்கறேள்? நான் எப்போதும் பொய்யே சொல்றதில்லே முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள், கின்னரர், கிம்புருடர், சித்தவித்தியாதரர் இவா சாட்சியா சொல்றேன்.

**தேவர் :**—துரையவர்கள் மனம் வைத்து நீதி வழங்க வேண்டும் மருதரசர்களுக்கு என் அத்தை இந்த ஜமீனை இனமாகக் கொடுத்துவிட்டாள்...

**வெல்ஷ் :**—அப்போது முத்து வடுகநாத உடையணத் தேவர் உமக்குச் சொந்தமா?

**தேவர் :**—ஆமாம். எங்கள் பெரியப்பாவின் சித்தி வயிற்றுப் பேரனின்...

**தமையன் :**—சித்தப்பாவுக்குத் தங்கை மகள் ஒருத்தி...

**வேதியர் :**—அவளுடைய மாமன் மகளுடைய இரண்டாவது மாமியாரின் நாத்தனாருடைய கொழுந்தியாருக்கு தூரத்து உறவு வேலுநாச்சி...!வேலு நாச்சியே நம்ம தேவருக்குச் சொந்தம்னா, செத்துப் போன முத்துவடுவநாதரும் சொந்தம்தானே...? அந்தப் பாத்யதை வைச்சுப் பார்த்தா நம்ம தேவர் வாளுக்கு ஆயிரத்து ஐநூத்து ஐம்பது சதுர மைல்

விஸ்தீரணம் உள்ள சிவகங்கைச் சீமையிலே முக்காலே அரைக்காலே மூன்று வீசத்து இரண்டு மாகாணியே காணி அரைக்காலுி பாகம் சொந்தம் ஆறது.

**கறுத் :**—உரிமையை உதறித் தள்ளிவிட தேவருக்கு இஷ்டமில்லேங்க.

**தேவர் :**—நீங்க ஏழைமேல் தயவு வைத்து ஒரு உத்திரவு போட்டால் போதும்.

[அக்நியு பொருள் பொதிந்த பார்வை ஒன்றை வெல்ஷை நோக்கிச் செலுத்துகிறன். குறிப்பறிந்த...]

**வெல்ஷ் :**—இது அநியாயம், மிஸ்டர் தேவர்! உங்களுக்குச் சேரவேண்டிய சொத்துக்களை விட்டுவிட்டு வெறுங்கையுடன் இருப்பது உங்களுக்கு அவமானமாக இல்லே?

**வேதியர் :**—என்ன பண்றது? தேவர்வாளுக்கு ஏழரை ஆண்டு அஷ்டமத்திலே சனி பார்வை யிருந்தது. இப்போதான் சிம்ம லக்கினத்தில் சுக்கிர திசை ஆரம்பிச்சிருக்கு......! புதனுடைய நேரிடையான பார்வை வியாழனுக் கடுத்த வெள்ளிமீது விழுந்து...

**அக்நியு :**—ஷட்டப், மிஸ்டர் ஐயர்! நாங்கள் தேவரைக் கேட்கிறோம்.

**தேவர் :**—என் வாழ்வே தங்கள் கையில்தான் இருக்கிறது.

**வேதியர் :**—சிவகங்கை சிம்மாசனத்திலே அமர வேண்டியவர்...

**கறுத் :**—கால் ஒடிந்து ஆட்டங்கண்டுபோன நாற்காலியில் உட்காருகிறர்!

**வெல்ஷ்** :—பரிதாபம்...

**வேதியர்** :—அழகான அரச முடி சூட வேண்டிய தலையில்...

**கறுத்** :—அழுக்கடைந்த எட்டுமுழ வேட்டியைத் தலைப் பாகையாகச் சுற்றிக்கொண்டிருக்கிறார், சார் !

**அக்நியு** :—பரிதாபம்...! பரிதாபம்...!!

**தமையன்** :—என் தம்பி பட்டத்து யானைமீது பவனி வர வேண்டியவன்...

**கறுத்** :—நல்ல செருப்புகூட இல்லாமல், காலால் நடந்து வந்தாருங்க...!

**வேதியர்**—(கறுத்தானை நோக்கி எரிச்சலுடன்) மற்றவா மட்டும் கையால் நடக்கிறாளோ...? நீர் சும்மா இருங் காணும்! (கர்னலைப் பார்த்து பணிவுடன்) ஹி...ஹி ...துரைவாளுக்கு ஒண்ணு மட்டும் சொல்றேன் ! முறுக்கேறி நிற்க வேண்டிய தேவருடைய மீசை யைப் பாருங்கோ... அவமானத்தைச் சகிக்க முடி யாம தொங்கிப் போயிடுச்சு ! துரைவாள் கருணை பண்ணணும் !

**வெல்ஷ்**:—அதெல்லாம் சரி, மிஸ்டர்! நாங்கள் அவருக்கு உதவி செய்கிறோம்; தேவரையே மன்னராக்கு கிறோம். ஆனால், அவர் எங்களுக்கு முழு மனத் தோடு உதவ வேண்டும்...

**கறுத்** :—உதவுவாருங்க...கம்பெனிக்கு நாயா உழைப் பாருங்க...

**வேதியர்** :—வேணும்னு நானும் ஒழைக்கிறேன் !

**கறுத் :**—(வேதியரை நோக்கி எரிச்சலுடன்) யோவ்! நீ சும்மா இருய்யா! நீ வேறே குறுக்க குறுக்க குண்டு பாயறே! (கர்னலைப் பார்த்துக் கனிவுடன்) எப்படி யாவது மனசு வையுங்க, சார்!

**தமையன் :**—எங்களுக்கு சிவகங்கை, காளையார் கோயில் முதலிய இடங்களின் இரகசியப் பாசறைகள் எல்லாம் தெரியும்.

**தேவர் :**—அந்த உளவுகளை உங்களுக்குக் கூறுகிறோம்!

**அக்நியு :**--ஆல் ரைட், மிஸ்டர் தேவர்! நாங்கள் சட்ட பூர்வமாக சிவகங்கைக்கு உம்மையே அரசராக்கு கிறோம். பட்டாபிஷேகத்தை சோழவரத்தில் வைத்துக்கொள்ளலாம்.

**தேவர் :**—தங்கள் சித்தம்!

**வேதியர் :**—அடிமைகளின் பாக்கியம்!

[கை கூப்புகின்றனர், தேவரும் அவர் ஆட்களும்]

**வெல்ஷ் :**—உங்கள் நன்றியின் அறிகுறியாக ஒரு உதவி செய்யுங்கள் பார்க்கலாம்.

**தேவர் :**—தாராளமாகச் செய்கிறோம்!

**அக்நியு :**—இது சென்னைக்கு எழுதப்பட்ட கடிதம். இதைப் புதுக்கோட்டையிலிருக்கும் கர்னல் பிளாக் பர்னிடம் சேர்த்துவிட வேண்டும். செய்தியைச் சேர்ப்பதற்கு ஆறு வராகன் பணம் தருகிறோம்.

**ஒரு மறவன் :**—(வந்து) நான் கொண்டுபோய்ச் சேர்க் கிறேன்.

**வெல்ஷ் :**—கறுத்தான்! இவனை உன்னுடன் அழைத்துச் செல்; அங்கு கர்னல் கொடுக்கும் பதிலை இவன் மூலமாகவே அனுப்பு.

**கறுத் :**—சரி...சார்!

[கறுத்தானும் மறவனும் கடிதத்துடன் செல்கின்றனர்.]

**அக்நியு :**—மிஸ்டர் வெல்ஷ்! கம்பெனிப்பட்டாளம் நாளைக்கு சோழவரம் செல்வதற்கான ஏற்பாடுகளைச் செய்யுங்கள்.

— **திரை** —

## காட்சி 24

காளையார் கோயில் காடு

[கறுத்தானும், கடிதம் கொண்டு செல்லும் மறவனும் ஈட்டிகளுடன் வருகின்றனர். எங்கேயோ தூரத்திலிருந்து ஒரு குரல் கேட்கிறது.]

**குரல் :**—நில்லுங்கள்...!

[திகைப்புடன் நின்றுவிட்டு, சற்று வேகத்துடன் நடக்கின்றனர்.]

**குரல்:**—யாரோ செல்லும் சத்தம் கேட்கிறது. யார் அது செல்வது? நில்லுங்கள்!!

[இருவரும் ஓடுகின்றனர். எதிரில் வந்த முத்தய்யன் அவர்களைத் தடுத்து நிறுத்துகிறான்.]

**முத்தய்யன் :**—நிற்கச் சொன்னால் ஓடுகிறீர்களே...

**கறுத்தான் :**—அது எங்கள் இஷ்டம்...

**முத்தய்யன் :**—அது நீ சொல்லாமலே புரிகிறது!

**கறுத்தான் :**—வாட்...வாட்...! என்னையே எதிர்த்துப் பேச ஆரம்பிச்சுட்டயா? ஏய்......நான் இப்போது யார் தெரியுமா? பறங்கித் துரைகளோட அந்தரங்கக் காரியதரிசி.........

**முத்தய்யன் :**—அயோக்கியப் பய...எனக்கு நன்றாகத் தெரியுமே...! நீ பறங்கிக்காரனுக பாதம் தாங்கி... உண்ட வீட்டையே இரண்டகம் பண்ணும் நாசக்காரன்...... புதுக்கோட்டை துரோகியின் வளர்ப்புப் பிள்ளை......அடிமை மனப்பான்மையின் முன்னோடி.........

**கறுத்தான் :**—இவரு ரொம்ப நன்றியுள்ள ஜென்மம்...... அட பிழைக்கத் தெரியாதவனே! முடிஞ்சுதா உன் ஒப்பாரி.........

**முத்தய்யன் :**—இல்லை.........விசயத்தையே இப்பதான் ஆரம்பிக்கப் போகிறேன். உண்மையைச் சொல்லுங்க...இல்லைன்னா இந்தக் கட்டாரிக்குப் பதில் சொல்லி யாகணும்......

**கறுத்தான் :**—வாட்.........?

**முத்தய்யன் :**—கம்பெனி முகாமிலேயிருந்து கடிதம் தானே கொண்டுபோகிறீர்கள்.........

**கறுத்தான் :**—முத்தய்யா! என் முன் கோபத்தைக் கிளருதே......

**முத்தய்யன் :**—துள்ளும் மாடு பொதி சுமக்காது, தம்பி!

**கறுத்தான் :**—ஆ......!

[ஓங்கிக் குத்துகிறான். மறவன் ஈட்டியைச் சுழற்றி முத்தய்யனை அடிக்கிறான். அது தவறிப்போய், கறுத்தான் மண்டை மீது விழுகிறது. கறுத்தான் கீழே சாய்கிறான். முத்தய்யன் தன் மீது பாய்ந்து வந்த மறவன் மார்பில் கட்டாரியால் குத்தி அவனை வீழ்த்தி, கடிதத்தைப் பறித்துக்கொண்டு திரும்பும்போது, கறுத்தான், அவன் காலை இடறிவிடுகிறான். முத்தய்யன் கீழே விழ, அவன் மார்பில் ஈட்டியைப் பாய்ச்சிவிட்டுக் கடிதத்தைப் பிடுங்கிக் கொண்டு ஓடுகிறான், கறுத்தான். சற்று நேரங்கழித்து முத்தய்யன் மார்பில் தாங்கிய ஈட்டியுடன் தள்ளாடித் தள்ளாடி நகர்கிறான். பின்னணியில் சோகம் இழைகிறது.]

— திரை —

## காட்சி 25

புதுக்கோட்டை
தொண்டைமான் மனை

[தொண்டைமான், பிளாக்பர்ன், கறுத்தான் மூவரும்.]

**கறுத்தான் :**—உண்மைதானுங்க! என் தலை தப்பியது நீங்க செய்த புண்ணியம்; எங்கூட வந்தவன் கூண்டோட போயிட்டான். (பெருமூச்சுடன்) நான் மட்டும் எப்படியோ தப்பிப் பிழைச்சு வந்தேன். இந்தாங்க, அந்த ஓலை......

[கடிதத்தைக் கொடுக்கிறான்.]

**பிளாக்பர்ன் :**—(பிரித்துப் படித்தபின்) சபாஷ், கறுத்தான்!

**கறுத்தான் :**—நீங்க என்னவோ ஒரு சொல்லில் முடிச்சுட்டிங்க...! நான் உயிரைக் கையால் பிடிச்சு வந்தேன்

**பிளாக்பர்ன் :**—முக்கியமான செய்திதான்......

**தொண்டை :**—ஆங்கில அரசாங்கத்திற்கு, நீ செய்த உதவிக்கு என் பாராட்டு, கறுத்தான்!

**கறுத்தான் :**—பாராட்டில் என்னங்க இருக்குது? உப்பு சப்பில்லாத கதை அது! இப்ப உலகமே பணம் காசில் தானுங்க உருளுது!

**தொண்டை :**—நீ சொல்வது புரிகிறது. இதோ......

[சிறு பண முடிப்பை அவன் கைகளில் எறிகிறான். அதைத் தன் கண்களில் ஒத்திக்கொண்டே......]

**கறுத்தான் :**—ஒரு விஷயமுங்க... படமாத்தூர் தேவரையும் அவருடைய ஆட்களையும் கர்னல் துரையிடம் அழைச்சுகிட்டு போனேன். தேவரையே புதிய ராசாவாகப் பிரகடனப்படுத்த கம்பெனிக்கு எழுதி அனுமதி வாங்கணும்னு சொன்னாரு. சிவ கங்கைக்கு அரசராக வேணும்னா நாலுகோட்டை கிராம மக்களின் சம்மதம் பெறணுமாம். முடிசூட்டுவதற்குள் அவர்களைச் சரிப்படுத்த வேண்டியது உங்களுடைய பொறுப்பு என்றார்.

**பிளாக்பர்ன் :**—மிஸ்டர் புதுக்கோட்டை! பார்த்தீரா, எவ்வளவு தீவிரமாக வேலை நடக்கிறது! நீர் கறுத்தானிடம் பத்தாயிரம் பொன் கொடுங்கள். கறுத்தான்......

**கறுத்தான் :**—வாட்... சார் !

**பிளாக்பர்ன் :**—நீ நாலு கோட்டைக்குச் செல். அந்தப் பொன்னை வாரி இறைத்து, அவ்வூர் மக்களை வசியப் படுத்து! என்ன மிஸ்டர், புதுக்கோட்டை...!

**தொண்டை :**—அருமையான வழி ! பாதாளம் வரையில் பாயும் பணம், பக்குவமில்லாதவர்களின் இதயத்தில் பாய்வதுதானா, கடினம் !

[இருவரும் சிரிக்கின்றனர். கறுத்தான் பணத்துடன் செல்கிறான்.]

— **திரை** —

## காட்சி 26

காளியார் கோவில்
காட்டிடையே ஒரு குடில்

[முத்தய்யன் மார்பில் வழியும் இரத்தத்துடன், தள்ளாடிக் கொண்டு வருகிறான். குடிசையின் வாயிற் பக்கம் வந்ததும்...]

**முத்தய்யன் :**—முனியம்மா... முனியம்மா !

[முனியம்மா தட்டியைத் திறந்து கொண்டு வருகிறாள்.]

**முனியம்மா :**—(வெறுப்புடன்) என்ன ? உனக்கு என்ன வந்தது கேடு ?

**முத்தய்யன் :**—கறுத்தான்...கறுத்...தா...ன் என்னை ஈட்டியாலே...

[நிற்கமுடியாமல் அருகிலிருக்கும் கம்பத்தைப் பிடித்துக்கொள்கிறான்.]

**முனியம்மா :**—மார்பிலே குத்திட்டானா...? நெஞ்சுக் குழியிலே குத்தி உன்னைக் கொல்லாம போனானே—அவன் ஒரு முட்டாள்...! நீ ஒழிஞ்சாதான் எனக்கு நிம்மதி...நான் உன்னை கட்டி கிட்டு என்ன சுகத்தை அனுபவிச்சேன்...? சீதை மாதிரி காட்டிலே வந்து குடிசை போட்டுகிட்டு கல்லிலும் முள்ளிலும் கஷ்டப்படறேன். ஒரு நல்ல சேலை உண்டா... நாலுபேரைப் போல நகை நட்டு உண்டா... நாக்குக்கு ருசியா திங்கறதுக்கு நாலுவித பதார்த்தம்

உண்டா... உலைவச்சு நாலு நாளாச்சு... அடுப்பிலே பூனை தூங்குது......

**முத்தய்யன் :**—அடிப்பாவி! நான் உயிருக்கு மன்றுடறேன்; நீ என்னடி உபந்யாசம் பண்றே!

**முனியம்மா :**—உன்னை கட்டிகிட்டதுக்கு வேற என்ன செய்ய முடியும்? கறுத்தானை பாரு... கந்தல் துணி கூட இல்லாம இருந்தான். இப்போ, காலிலேயும் கையிலேயும் உறை தச்சு போட்டுகிட்டு துரை மாதிரி போருன்... வர்ரான்...! நீயும் இந்த அன்னக் காவடிகாரனுகளை விட்டுவிடு; வெள்ளைக்காரங்க கூட சேர்ந்துடு!!

**முத்தய்யன் :**—சீ! நயவஞ்சகி! நான் ஒன்றும் சோற்ருலடித்த நாய் ஜென்மம் எடுக்கல. இனிமேல், செத்தால்கூட உன் கையால் தண்ணி வாங்கிக் குடிக்கிறதில்லை. என் உசிரு இருக்கிறவரைக்கும் மருதய்யங்களுக்கு உழைச்சுட்டு, உன் கண்ணிலே படாம எங்கேயாவது விழுந்து சாகிறேன்.

[வலிபொறுக்கமுடியாமல் திணறிய படியே செல்கிருன்.]

**முனியம்மா :**—(முகத்தைச் சுளித்து) போறு போயேன். நான் எங்க ஆத்தா வீட்டிற்குப் போறேன்.

[மூட்டை முடிச்சுக்களைக் கட்டிக் கொண்டு கிளம்புகிருள்.]

**முனியம்மா :**—தாலி கட்டிக்கின நாளா பாவிக்கு உழைப்பு எடுத்து ஓடாய் தேய்ஞ்சு போனே(ன்). பவிஷுகெட்டவன்...... பாழாய்ப் போக...!

[கையை நொடித்துவிட்டு, வேறு திசையில் மூட்டைகளுடன் செல்கிருள்.]

— திரை —

## காட்சி 27

நாலு கோட்டை
ஊர் மன்றம்

[நான்கைந்து பெருந்தனக்காரர்களும், நாட்டாண்மைக்காரர்களும் அமர்ந்துள்ளனர். அவர்கள் கைகளில் கறுத்தான் பொற்காசுகளை அள்ளி அள்ளிப் போடுகிறான். ஒரு பெரியவர் மட்டும் பொன் வாங்க மறுக்கின்றார். கடைசியில்........)

**கறுத்தான் :**—நான் சொன்னதெல்லாம் ஞாபகம் இருக்குதா...? நாளைக்கு ஒருத்தரும் மறுப்பு சொல்லக்கூடாது ?

**பெரியவர் :**—நான் சொல்வேன்......

**கறுத்தான் :**—வாட்...வாட்...?

**பெரியவர் :**—படமாத்தூர் தேவர் புதிய ராசாவாக வரக்கூடாது...மருது பாண்டியரே இருக்கணும்...!

**கறுத்தான் :**—வா...ட்..., பெரியவரே ! இவ்வளவு பேரு சும்மா இருக்காங்க. நீங்க எதிர்த்து பேசறீங்களே...! அப்போ, நீங்க மட்டும் அறிவாளி... இவங்களெல்லாம் முட்டாளா என்ன ?

**ஒருவர் :**—ஆமாம்...நாங்க மட்டும் முட்டாளுங்களா ?

**பெரியவர் :**—நீங்க கைக்கூலி பெற்றுக்கொண்டு மனச்சாட்சிக்கு விரோதமா ஒத்துக்கறீங்க...

**மற்றவர் :**—வேணுமானால் நீங்களும் ஆயிரம் இரண்டாயிரம் வாங்கிக்கொள்ளுங்களேன்.

**கறுத்தான் :**—இன்னும் அதிகமா வேண்டுமென்றால் வாய்விட்டுக் கேளுங்கள். நமக்குள்ளே கூச்சம் எதுக்கு...சும்மா கேளுங்க... தாராளமா தர்றோம்.

**பெரியவர் :**—அந்த மாதிரியான ஈனப் பொறைப்பு எனக்கு வேணும்.

[எழுந்து சென்று விடுகின்றார்.]

**கறுத்தான் :**—பாருங்க! தேவர் ராசாவா வருவதில் இவருக்கு எவ்வளவு பொறாமை? இந்த மாதிரிதான் ஒரு நல்ல காரியம் செய்யப் போனா, இதைப்போல காளான் பிடுங்கிகள் கலாட்டா பண்றது! நான் உங்களுக்குக் கைக்கூலி கொடுத்தேனாமே...இது எந்தக் கடவுளுக்கு அடுக்கும்? நான் அன்பளிப்பு தானே கொடுத்தேன். நீங்க என்ன சொல்றீங்க...?

**ஒருவர் :**—அவர் கிடக்கிறார்...தள்ளுங்க...!

**மற்றவர் :**—தேவரை நாங்க ஆதரிக்கறோமுங்க!

**கறுத்தான் :**—ஆல்ரைட்! அது போதும் எங்களுக்கு... நான் வரட்டுமா? வாட்...?

**அனைவரும் :**—(எழுந்து) செய்யுங்க!

[கறுத்தான் செல்கிறான், மகிழ்ச்சியுடன். மற்றவர்கள் பேசிக்கொண்டே நடக்கின்றனர்]

**ஒருவர் :**—(தமது குடுமியைத் தட்டிக்கொண்டே) பார்த்தியா, அண்ணே! கறுத்தான் இப்ப எல்லாம் இங்கிலீசுல பேசறான்...என்னவோ 'வாட்டு'ங்கறான்...... 'பூட்டு'ங்கறான். நமக்கு ஒண்ணுமே புரியல......

**இன்னொருவர் :**—அது போவட்டும்.....'ரயிட்டோ...... கியிட்டோ' எங்கிறனே.! அப்ப எப்படி ரெண்டு கையையும் சோப்பியிலே போட்டுகிட்டு சொல்ற(ன்), கவனிச்சிங்களா?

**மற்றவர் :**—அவன் இப்ப வேட்டி சட்டையையே தொடறதில்லே, அண்ணே! வெள்ளைக்கார துரைங்க கூடவே குதிரையிலே போறானும்...காப்பி தண்ணி குடிக்கறானும்......

**ஒருவர் :**—இப்ப எல்லாம் அவன் கையால சாப்பிடற தில்லையாமே...கரண்டியாலேதான் சாப்பிடறானும்.

**மற்றவர்:**—(பெருமூச்சுடன்)ம்...நல்ல வழிக்கு வந்தவன்!

**ஒருவர் :**—நீங்க வழியைப் பார்த்து போங்க......கீழே முள்ளு கெடக்குது...!

[வீதியின் திருப்பத்தில் மறைகின்றனர்.]

— திரை —

## காட்சி 28

12 செப்டம்பர் 1801
சோழவரம்—கோயில்

[படமாத்தூர் கௌரி வல்லப பெரிய உடையத் தேவன் அலங்கரிக்கப்பட்ட யானையின்மீது ஊர்வலமாக வருகிறான். அவனுடன் கர்னல் அக்நியு, வெல்ஷ், பிளாக்பர்ன், தொண்டைமான், வேதியர்,

கறுத்தான் முதலியோரும், நாலு கோட்டை பிரமுகர்களும் வருகின்றனர். அனைவரும் கோயிலில் குழுமுகின்றனர்.

**அக்நியு :**—தோழர்களே! சிவகங்கை ஜமீன் தமக்கு நியாயமான முறையில் சேரவேண்டும் என்று படமாத்தூர் தேவர் எங்களிடம் முறையிட்டுக் கொண்டார். இல்லையா, தோழரே?

**தேவர் :**—ஆமாம்......

**அக்நியு**—அதன்படி நாங்கள் அவரை இந்தச் சீமைக்குப் புதிய அரசராக நியமிக்கிறோம். நீங்கள் கேட்கலாம் பழைய அரசர்கள் மருது சேர்வைக்காரர்கள் என்ன ஆனார்கள் என்று. அவர்கள் தேசத்துரோகிகளாகி விட்டனர். கம்பெனி அவர்களுக்கு எவ்வளவோ சலுகை அளித்தும் கப்பம் கட்டவில்லை! மக்களுக்கு நன்மை செய்யாமல் தான்தோன்றித்தனமாக நடந்து கொண்டனர். இல்லையா, கறுத்தான்?

**கறுத்தான் :**—ஆமாம். உண்மைதான் !

**அக்நியு :**—நாங்கள்தான் வெள்ளையர்......விரோதிகள்.! எங்களைக்கொல்வதில் நியாயம் இருக்கிறது ஆனால், எங்களுக்கு உதவியாக வந்த புதுக்கோட்டை, எட்டயபுரத்துத் தமிழர்களைக்கூட அநியாயமாகக் கொன்று குவித்தனர். இது எப்படி நியாயமாகும்? அவர்களுக்கு ‘தமிழ்... தமிழர்’ என்ற உணர்ச்சியிருந்தால் அப்படிச் செய்திருப்பார்களா...?

**தொண்டை :**—செய்திருக்கவே மாட்டார்கள். அவர்கள் துரோகிகள். முக்காலும் உண்மை!

**அக்நியு** —அது மட்டுமா? முன்பொரு தடவை தங்கள் அரண்மனை இருந்த சிறுவயலையே கொளுத்திவிட்டார்கள். கும்பினியாருக்கும் அவர்களுக்கும் விரோதம் என்றால் ஊர் என்ன செய்தது? அவர்களுக்குத் தமது சொந்த ஊரின் மீதே பற்றில்லாமல் தீ வைத்துப் பொசுக்கினர்களே......நாட்டுப் பற்று மட்டும் எங்கிருந்து இருக்கும்? எதற்கெடுத்தாலும் குத்துவதும் கொளுத்துவதும்தானா? காட்டுமிராண்டிகள்! இந்த நாடு பிடிக்கவில்லையென்றால், மூட்டை முடிச்சுகளைக் கட்டிக்கொண்டு எங்கேயாவது ஓடிப்போவது! புரட்சி செய்கிறார்களாம் புரட்சி... போக்கற்றவர்கள் !

ஆகவேதான், மருதுபாண்டியரை நீக்கி விட்டு அதிகார பூர்வமாக படமாத்தூர் உடையத்தேவரை அரசராக்குகிறோம். தேவருக்குப் பாதுகாப்பாக நூறு வீர மறவர்களைக் கொடுக்கும்படி மிஸ்டர் புதுக்கோட்டைத் தொண்டைமானைக் கேட்டுக் கொள்கிறேன்.

[ அமர்கிறான் ]

**தொண்டை** :—பெரியோர்களே! மருது சகோதரர்கள் எனக்கு விரோதிகள் என்பதால் நான் குற்றம் சாட்டவில்லை. நான் அவ்வளவு கேவலமான எண்ணம் உடையவனும் இல்லை. உண்மையை உங்களுக்குக் கூறுகிறேன். சிவகங்கைச் சீமை மருதப்பர்களின் பூர்வீகச் சொத்து அல்ல. வேலு நாச்சியை ஏமாற்றி அவள் இறக்கும்போது வாங்கிக் கொண்டார்கள் அவர்கள் சாத்வீகமான முறையில்

நடந்திருந்தாலும் பாதகமில்லை...போனால் போகி றது என்று விட்டுவிடலாம். ஆனால் அவர்கள் அக்கிரமக்காரர்களாக......அட்டூழியத்தின் சின்னங் களாக இருக்கிறார்கள். இரண்டு மூன்று வாரத் திற்கு முன்னால், என்னிடம் வந்து, 'கொடு ஒரு லட்சம் பொன்' என்று கூப்பாடு போட்டார்கள். நான் 'மாட்டேன்' என்றேன். அவ்வளவுதான். 'உன்னைக் குத்துவேன்......வெட்டுவேன் ; புதக் கோட்டையைக் கொளுத்துவேன்...பொசுக்கு வேன்' என்று மிரட்டினர். சத்தம் கேட்டு என் ஆட்கள் வருவதற்குள் சுவரேறிக் குதித்து மாய மாய் மறைந்துவிட்டார்கள். இந்த மாதிரியான அக்கிரமச் செயல்களாலேயே அவர்கள் போக்கு எனக்குப் பிடிக்கவில்லை.

அந்த மனிதாபிமானம் இல்லாத மடையர்களை நீக்கிவிட்டு, என்னைப்போல சுத்தவீரரும், நாட்டுப் பற்றும் மொழிப் பற்றும் ஒருங்கே கொண்டவரும், என் நண்பருமான ஸ்ரீ படமாத்தூர் கௌரி வல்லப பெரிய உடையத்தேவரை அரசராக்குவதில் பெரு மகிழ்ச்சியடைகிறேன். இந்த நல்ல காரியத்தை முன்னின்று நடத்தும் கர்னல் அக்நியு துரை அவர் களை மனமாரப் போற்றுகிறேன். ஒரு நூறு என்ன ...ஒன்பது நூறு வீரர்களைத் தேவருக்குப் பாதுகாப் பாக அனுப்பி வைக்கிறேன். விழாவுக்கு அனுமதி கொடுத்த நாலு கோட்டை பிரமுகர்களுக்கும் எங்கள் நன்றி.

அக்கிரமம் வீழ்ந்தேதீரும்...அதுபோல, மருது பாண்டியர் அரியணையிலிருந்து விழுந்தனர்! உண்மை

எப்போதும் வெல்லும்... அதன்படி உத்தமர் படமாத்தூர் தேவர் வெற்றி பெறுகிருர்!

தீயோர்களின் பேச்சைக் கேட்டுப் பேயாட்டம் போடாமல் நாங்கள் சம்பிரதாயத்தை மதிக்கிரேம். ஆகவே, சாஸ்திரோக்தமாக இப்போது புரோகிதர் இந்த முடிசூட்டு விழாவை நடத்தி வைப்பார்.

[வேதியர் நெருப்பில் நெய்பெய்து, மந்திரம் செபித்து, யாகம் வளர்த்து, முடிசூட்டி வைக்கிருர். இன்னிசையும் வாழ்த்தொலியும் வானைப் பிளக்கின்றன ]

— திரை —

## காட்சி 29

காளையார் கோயில்
காட்டு அரண்

[மருது சகோதரர்கள், ஊமைத்துரை, துரைசாமி முதலியோருடன் விடுதலை வீரர்கள்.]

**துரைசாமி :**—நரியும் புலியும் ஒன்ருகக்கூடி நன்றியில்லா நாய்க்கு முடி சூட்டியதாம். காகமும் கழுகும் கூட்டம் போட்டு வாழ்த்து இதழ் வாசித்துக் கொடுத்தனவாம்.

பெ. மருது :—எவ்வளவு துணிச்சல்? சிவகெங்கைச் சீமையின் வரலாறு தெரியுமா இந்தத் துரோகிகளுக்கு. மாத்தூர் நவாபுவால் ஏலத்திற்குக் கொண்டுவரப்பட்ட இந்த ஜமீனை நான் என் சொந்தப் பணம் போட்டு மீட்டு அனுபவித்து வருகிறேன். அது தெரியாமல் வேலு நாச்சியை நாங்கள் ஏமாற்றி விட்டோம் என்றனும் அந்த எத்தன், புதுக்கோட்டையான். தேவஸ்தானம், சேறுதட்டு, உப்பளம், சத்திரம், சாயவேல், சுங்கம், ஆயம், மடம் முதலியவைகளை நானே கிரயத்துக்கு வாங்கினேன். மீதியிருந்த சிவகங்கை, காளையார் கோயில் போன்ற சில இடங்களை வேலு நாச்சி இறக்கும்போது எங்களிடம் ஒப்படைத்தாள். நன்றி கெட்டவர்கள் ஒன்றாகக்கூடி எவ்வளவு நாசூக்காகக் கயிறு திரித்து விடுகிறார்கள்.

ஊமைத்துரை :—ஆயிரம் சொல்லிக் கொள்ளட்டும்; மறவர்கள் ஏமாந்துவிட மாட்டார்கள்.

சி. மருது :—இல்லை, துரை! நாம் இனிமேல்தான் விழிப்பாக இருக்க வேண்டும். மறவர்களிடையே இருக்கும் ஒற்றுமையைக் கண்டு இப்போது பிரித்தாளும் சூழ்ச்சியில் இறங்கி இருக்கிறார்கள். நாம் சர்வ ஜாக்கிரதையாக இருந்தால்தான் வெற்றி காண முடியும். என்ன இருந்தாலும், படமாத்தூரான் 'பொம்மை ராஜா' ஆனாலும், 'புதிய ராஜா......... புதிய ராஜா' என்று அவர்கள் கூறி மக்களின் மனதைத் தம் பக்கம் இழுத்துக் கொள்ளலாம், அல்லவா?

**ஊமைத்துரை :**—அவர்கள் முந்திக் கொள்வதற்கு முன்பாக நாம் ஒன்று செய்வோம். இப்போதே விடுதலை வீரர்களுடன் 'பிரான்மலை'க்குச் சென்று அங்கிருந்து சிங்கம் பிடாரியைத் தாக்குவோம்.

**பெ. மருது :**—ஆம்! சோழவரத்தில் சோம்பிக்கிடக்கும் பறங்கிப் படை சுறுசுறுப்புப் பெறுவதற்குள் நாம் இழந்துவிட்ட ஊர்களைப் பிடிப்பதற்குச் சரியான வழி அது. அனைவரும் பிரான் மலைக்குப் புறப்படுங்கள். அங்குள்ள பெரிய பெரிய பாறைகளும், குகைகளும் விடுதலை வீரர்கள் தங்கிப் போரிடுவதற்கு ஏற்ப வசதியாக இருக்கும்.

— **திரை** —

## காட்சி 30

புதுக்கோட்டை
கறுத்தான் இல்லம்

[**கண்ணம்மா** பாத்திரம் தேய்த்துக் கொண்டிருக்கிறாள். கறுத்தான் குடித்துக் கொண்டே கையில் மதுக் கலயத்துடன் வருகிறான்.]

**கறுத்தான் :**—(நா குழறி) கண்ணம்மா! கண்ணம்மா...! என்ன பண்றே...?

**கண்ணம்மா :**—பானையும் சட்டியும்......ம்ஹூக்கும்...

**கறுத்தான் :**—பண்ணுவே......பண்ணுவே......

[பக்கத்தில் ஈட்டியை வைத்துவிட்டு அருகேயிருக்கும் கல்லின்மீது உட்காருகிறான்.]

**கறுத்தான்** :—ஓஹோ......பாத்திரம் தேய்க்கிறயா......

**கண்ணம்மா** :—ஆமா(ம்)! ரொம்ப நாளா கவனமில்லாம விட்டுட்டேன். அதிக அழுக்கு சேர்ந்து போச்சு! தேய்ச்சு தேய்ச்சு பார்க்கிறேன், அழுக்கே போகலெ...கறுத்து கிடக்குது,உன் மனசு போல...

**கறுத்தான்** :— வாட்...... வாட்......? என்ன கோவமா பேசறே. போயண்டி! நான் உங்கிட்ட ஒரு முக்கியமான விஷயம் சொல்லுறுமுன்னு வந்தேன். நீ என்னவோ முடுக்கிகிட்டு நிக்கறியே......

**கண்ணம்மா** :—சொல்லித் தொலை......

**கறுத்தான்** :—அதிர்ஷ்டம் நம்மைத் தேடி வருதுடி. இனிமே ஆளுகளைபிடிக்க வேண்டியதுதான் பாக்கி. அப்புறம் நூறு வேலி நிலம் என் உள்ளங்கையிலே இருக்கிறப் போலதான்.

**கண்ணம்மா** :— (எழுந்து கவனமுடன்) நீ என்ன சொல்றே......

**கறுத்தான்** :—இன்னும் புரியலியா? அதுதான் அந்த மருதுப்பயக ஆட்டம் முடிஞ்சு போச்சு.

**கண்ணம்மா** :—ஆ...!

**கறுத்தான்** :—அலறுதடி! ஊமைத்துரையும் அவனுகளும் பதுங்கியிருந்த பிரான்மலையைப் புடிச்சுட்டோம்.

**கண்ணம்மா :**—அடப் பாவிங்களா...!நீங்க பாழாய்ப் போக...

**கறுத்தான் :**—(தன் பேச்சிலேயே கவனமாக) மறுபடியும் காளையார் கோயிலுக்கே ஓடிட்டானுக.

**கண்ணம்மா :**—நீங்க விளங்குவீங்களா...? விருத்திக்கு வருவீங்களா...?

**கறுத்தான் :**— வாட்...வாட்...! நீ எங்களை ஆதரிப்பேன்னு பார்த்தா......

**கண்ணம்மா :**—ஆதரிக்க மாட்டேன்; அக்கிரமம் செய்யற உங்களை ஆதரிக்கவே மாட்டேன்.

**கறுத்தான் :**—அப்போ...எங்களை 'அட்டாக்' பண்றே. அப்படிதானேடி...?

**கண்ணம்மா :**—அது என்னவோ...அந்த எழவு எடுத்த பேச்சு எனக்குத் தெரியாது. இந்தா பாரு...நீ குடி போதையில் இருக்கிறதாலே தெளிவா சொல்றேன். நீ பதுங்கிப் பதுங்கி அந்த பறங்கிக் காரனுக கூட சேர்ந்து பகல் கூத்து ஆடிட்டே வர்றே...நான் மருதய்யங்களுடைய விடுதலைப் பட்டாளத்திலே சேர்ந்து வெளிப்படையாகவே உங்களுக்கு எதிரா சண்டைபோடப் போறேன்.

**கறுத்தான் :**—வாட்...வாட்...?

**கண்ணம்மா :**—வெள்ளைக்காரனுகளை ஒழிக்கறதுக்கு முன்னே உன்னைப் போல, மானங்கெட்டுக் கெடக்கும் இனத்துரோகிகளை முதல்ல ஒழிக்கணும்...

**கறுத்தான் :**—ஆகா...நீ தாண்டி உத்தமி...பதி சொல் தாண்டாத பத்தினி...

**கண்ணம்மா :—**எப்படிப்பட்ட கணவனுக இருந்தாலும் எந்தத் தமிழச்சியும் எதிர்த்துப் பேசமாட்டா(ள்). இப்பகூட நீ என்னை பொய் சொல்லச் சொல்லு. கட்டின புருசனுச் சேன்னு உன் பேச்சுக்கு மதிப்பு கொடுத்து பொய் சொல்றேன். திருடச் சொல்லு... உனக்காகத் திருடறேன்! கொலை செய்யச் சொல்லு ...கொலை செய்யறேன். 'சாவுடன்னு' சொல்லு. சந்தோஷத்தோட செத்துக் காட்டறேன்.

**கறுத்தான் :—**அதெல்லாமா ஏன் சொன்றேன். (அன்புடன் கடிந்து) நீ பேசாம இருடன்னு இருக்க மாட்டேங்கறயே...

**கண்ணம்மா :—**இருக்க மாட்டேன். இந்த ஒரு விஷயத்திலே மட்டும் சும்மா இருக்கவே மாட்டேன். நம்ம சீமையிலே பொறந்தவங்களுக்கு எதிரா நாடோடிக் கூட்டத்தோட நான் சேரவும் மாட்டேன்; நீ சேர்ந்திருப்பதை நான் ஒத்துக்கிடவும் மாட்டேன்.

**கறுத்தான் :—**எலே, நிறுத்து! உன் மனசு எனக்கு நல்லா புரிஞ்சு போச்சு...இனிமே பேசாதே...! பேசினே உன்னைக் கொன்னுடுவேன்.

**கண்ணம்மா :—**இப்பவே கொன்னுடு. எனக்கு கவலையில்லை. பணத்துக்காக சொந்த இனத்தானையே காட்டிக் கொடுக்கிற ஈனப்பொழைப்பைவிட, பொறந்த மண்ணுக்காக உசிரை விடறது அப்படி ஒண்ணும் கெட்டுப் போனதில்லை.

**கறுத்தான் :—**(கோபமாக) கண்ணம்மா...!

**கண்ணம்மா** :— நீ கத்தறதிலே பிரயோசனமில்லை. உம் மேல் வைச்சிருந்த மட்டு மருவாதையெல்லாம், நீ முத்தைய(ன்) அண்ணனைக் குத்திப் போட்டு, படமாத்தூராரனை பட்டத்தரசனுக்குப் பாடுபட்டாயே அப்பவே போயிருச்சு...

**கறுத்தான்** :—வாட்...... வாட்......! மட்டு மருவாதையும் போயிடுச்சா...?

[மதுக் கலயத்தை அவள் தலைமீது போட்டு உடைக்கிறான்; ஈட்டியால் அவளை ஓங்கி அடிப்பதற்குள், அவள் அருகில் கிடந்த கம்பை எடுத்துக் கொள்கிறாள். மீண்டும் அவன் அடிப்பதற்குள் அந்தக் கம்பால் தட்டி, ஈட்டியைப் பிடுங்கிக் கொள்கிறாள்.]

**கறுத்தான்** :— (கூச்சலிட்டு) கண்ணம்மா! போடி வெளியே! ம். ஓடிப்போ......இனிமே இந்த வீட்டிலே காலையெடுத்துவைக்காதே !

**கண்ணம்மா** :—(ஈட்டியை எடுத்துக் கொண்டு) தாராளமா போறேன். கல்யாணம் ஆனதிலே யிருந்து 'கண்ணம்மா......கண்ணம்மா'ன்னு அன்பா கூப்பிடுவே! போகட்டும்... எல்லா போகட்டும்...! இந்தக் கணத்தோட என் ஆசை மச்சான் செத்துப் போயிட்டான்...உன் கண்ணம்மாவும் செத்துப் போயிட்டா... ஒன்று மட்டும் கடைசியா சொல்லிட்டுப் போறேன். இந்த மானமுள்ள கண்ணம்மாவை யாராலும் கொல்லமுடியாது. உன்னைப் போல இருக்கும் தாய்நாட்டு துரோகிகள் ஒருத்

தர் இரண்டு பேரையாவது கொன்னுட்டுதான் நான் சாவேன். நான் சாவறதுக்குள்ளே மருது ராசாவுக்கு என்னால் முடிஞ்ச உதவியை செஞ்சுட்டுதான் சாவேன்.

[ஈட்டியுடன் போகிருள். கறுத்தானின் மனம் குழம்புகிறது.]

**கறுத்தான் :—** (கலக்கத்துடன்) கண்ணம்மா......கண்ணம்மா! திரும்பிக்கூட பார்க்காம போருளே. அடிப்பாவி! உம்மேல என் உசிரையே வச்சிருந்தேனே.

[அவள் சென்ற திசையைப் பார்த்தவாறே, தலைமீது கை வைத்த வண்ணம் சோர்வுடன், கல்லின் மீது அமர்ந்து கலங்குகிருன்.]

**— திரை —**

## காட்சி 31

### காளையார் கோவில்

[குறுணி, குண்டன் என்ற இரு சிறுவர்களும் காணுமற்போன தங்கள் ஆடுகளைத் தேடிக்கொண்டு வருகின்றனர்.]

**குறுணி :—**ஏலே, குண்டா...!

**குண்டன் :—** ஏண்டா...

**குறுணி :**—கால் வலிக்குது...என்னுல் நடக்கவே முடிய லேடா...! இந்த நொண்டி ஆடு எங்கே போயிருக் கும்...

**குண்டன் :**—எங்கே போயிருக்கும்னு தெரிஞ்சா ஏண்டா அலையப்போறேம். நேராகப்போய் ஓட்டி வர லாமே...

**குறுணி :**—அது சரி'லே ! வயிற்றுக்கு நிறைய தீனியும் தழையும் இருந்தாகூட, இந்த ஆடு ஏண்டா இப் படி அலேஞ்சு அலேஞ்சு ஓடுது.

**குண்டன் :**—இது தெரியாதா, உனக்கு? பட்டினியா யிருக்கிறவன் பேசாம மூலேயிலே முடங்கிக் கிடக் கிருன்; கையிலே பணமும் காசுமா இருப்பு வச் சிருக்கிறவன்தான், 'இன்னும் நாலுபேரு அகப்பட மாட்டாளு......அவனுக வாயிலும் வயித்திலும் அடிச்சு நம்ப தொப்பையையும் தொந்தியையும் ரொப்பிக்க மாட்டோமா'ன்னு சுத்தி சுத்தி அலேய ருன். (சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு) அந்தப் புதுக் கோட்டை மவராசாவுக்கும் எட்டயபுரத்து ராசா வுக்கும் என்னடா இல்லே...அம்பது தலேமுறைக்கு உக்காந்து சாப்பிட்டாகூட அழியாது...அவ்வளவு செல்வம் இருந்தும் சும்மா இருக்காங்களா...... பரங்கிக்காரனுக்கூட சேர்ந்துகிட்டு, அக்கம் பக் கத்து ராசாவை யெல்லாம் விழுங்கி ஏப்பம்விடப் பார்க்கிருங்களே, எதுக்கு...? எல்லாம் பேராசை யடா பேராசை.

**குறுணி :**—உஸ்...யாரோ ஒரு தாய் வர்ருங்க. சும்மா இருடா...! நமக்கு ஏ(ன்) வம்பும் தும்பும்......

[கையில் ஈட்டியுடன் கண்ணம்மா வருகிறாள்.]

**குண்டன்** :—என்னங்க, ஆச்சி! இந்தப் பக்கம் ஒரு வெள்ளாடு போச்சிங்களா ?

**கண்ணம்மா** :—இல்லே, தம்பி !

**குறுணி** :—கால்கூட கொஞ்சம் தாங்கி தாங்கித் நடக்குமுங்க...

**கண்ணம்மா** :—நான் பார்க்கலேப்பா......

[சோர்வுடன் மரத்தடியில் அமர்கிறாள். சிறுவர்கள் ஒரு ஓரத்தில் மெல்லிய குரலில் தெம்மாங்கு பாடிக்கொண்டிருக்கின்றனர். முத்தையன் மார்பில் கட்டப்பட்டுள்ள பெரிய கட்டுடன் தள்ளாடியவாறே வருகிறான்.]

**கண்ணம்மா** :—(பதற்றத்துடன்) ஆ! முத்த'ண்ணு! முத்த'ண்ணு...!

**முத்தய்யன்** :—(மெல்ல) யாரு... கண்ணம்மாவா...? நீ எங்கேம்மா வந்தே...?

**கண்ணம்மா** :—அது பெரிய கதை; உங்க உடம்புக்கு எப்படியண்ணு இருக்கு...?

**முத்தய்யன்** :—(அமர்ந்து) வலி தாங்கமுடியலே'ம்மா... மூச்சுவிட முடிய'லே. நீ எனக்கு ஒரு உதவி செய்யறியா ?

**கண்ணம்மா** :—என்ன'ண்ணு ?

**முத்தய்யன் :**—மருதய்யங்க காளையார் கோயிலில் இருக்கிறாங்களாம். பறங்கிப் படை நாளைக்கு அவுங்க மேல படையெடுக்கப் போவுதாம். சாக்கிரதையா யிருக்கச் சொல்லணும் அவுங்களை...! ம்... என்னைப் பற்றி ஒன்றும் சொல்லாதேம்மா... சொன்னால், எனக்காக வருத்தப்படுவாக! ராசாவையும் நம்ம பட்டாளத்தையும் ரொம்ப கவனமா இருக்கச் சொல்லு. அதுவே போதும்...!

**கண்ணம்மா :**—அதுவரை நீ எங்கே யண்ணே, இருப்பாய்?

**முத்தய்யன் :**—நான் எப்படியாவது இருந்துக்குவேன். நீ சேதியை சீக்கிரமா எட்ட வை. குறுக்கு வழியா, சுடலைக் கொடியைத் தாண்டி காட்டுப் புளியந் தோப்பு வழியா போ. சீக்கிரம் போயிடலாம்... விரைவா ஓடு...!

**கண்ணம்மா :**—(குண்டனிடம்) தம்பி! இவரை சாக்கிரதையா பாத்துக்கோ.

**குண்டன் :**—சரி, ஆச்சி!

**கண்ணம்மா :**—நான் பொழுது சாயறதுக்குள்ளே வந்துடறேன்!

[ஓடுகிறாள், தனிமையில்......]

**குண்டன் :**—ஏலே, குறுணி...!

**குறுணி :**—என்னடா......

**குண்டன் :**—இந்த அண்ணாச்சி, நம்ம மருது ராசா வுடைய ஆளுபோல இருக்குது. இவரை நம்ம குடிசைக்கு அழைச்சுப் போகலாமா...?

**குறுணி** :—ஓ! அவரை கூப்பிட்டுப் பாரு. வந்தா கூட்டிகிட்டுப் போகலாம்.

**குண்டன்** :—(முத்தய்யனிடம் சென்று) என்னங்க, அய்யா! எங்க குடிசை இந்தா பக்கத்திலே கூப்பிடு தூரத்திலே இருக்கு... மெள்ள மெள்ள வர்றீங்களா?

**முத்தய்யன்** :—என்னால் நடக்கமுடியாதே, தம்பி!

**குறுணி** :—எங்க தோள்பட்டையை புடிச்சிகிட்டு மெதுவா வாங்க... கூப்பிடு தூரந்தான்... அங்கே போய் கூழோ தண்ணியோ குடிச்சா கொஞ்சம் தெம்பு வரும்.

**குண்டன்** :—மாலே மங்கறதுக்குள்ளற, அந்த ஆச்சியைக் கண்டு பிடிச்சு உங்களண்டை கொண்டு வந்து விடறோம்...

**முத்தய்யன்** :—சரி, தம்பி!

[மெல்ல எழுந்து அவர்களுடைய தோளைப் பற்றிக்கொண்டு செல்கிறான்.]

— திரை —

## காட்சி 32

பிரான் மலை
போர் முகாம்.

[தொண்டைமான், பிளாக்பர்ன், படமாத்தூர் தேவர், முதலானோருடன் கர்னல் அக்நியு.]

**அக்நியு** :—மிஸ்டர் புதுக்கோட்டை...!

**தொண்டை** :—என்ன சார்...

**அக்நியு** :—சென்னப் பட்டினத்திலிருந்து கவர்னர் கிளைவ் லெட்டர் எழுதி யிருக்கிறார், அய்யா......

**தொண்டை** :—என்னைப் பற்றி ஏதாவது......

**அக்நியு** :—படமாத்தூர் தேவர் அரசராவதற்கு நீர் செய்த உதவிகளுக்காக நன்றி தெரிவித்து இருக்கிறார். மருது பாண்டியரை ஒழிக்கும் போரில், நீர் செய்யும் மகத்தான உதவிகளைப் பாராட்டிப் பக்கம் பக்கமாகப் புகழ்ந்து இருக்கிறார்.

**பிளாக்பர்ன்** :—கவர்னர்பிரான் கிளைவ் அவர்களே பாராட்டியிருக்கிறார் இப்படிப்பட்ட பாக்கியம் யாருக்கும் அவ்வளவு சுலபத்தில் கிடைப்பதில்லை.

**தொண்டை** :—எல்லாம் தங்களைப் போன்ற துரைமார்களுடைய தயவு... இன்னும் என்னால் செய்ய முடிந்ததையெல்லாம் செய்யறேனுங்க.

**அக்நியு** :—...ம்... காளையார் கோயிலுக்குச் செல்லும் குறுக்கு வழியைத் தெரிந்து கொண்டால் போதும்; நாளையே வெற்றி நம்முடையதுதான்.

**பிளாக்பர்ன்** :—மிஸ்டர், புதுக்கோட்டை! அந்தக் குறுக்கு வழியைக் கூறுபவருக்குக் கொள்ளை கொள்ளையாகப் பணம் கொடுக்கப்படும் என்று பொது மக்களுக்கு அறிவியுங்கள்.

**தொண்டை** :—இப்போதே ஆவன செய்கிறேன்.

[தேவரும் தொண்டைமானும் பேசுகின்றனர்.]

**அக்நியு** :—நீர் கை தேர்ந்தவர், மிஸ்டர் பிளாக்பர்ன்! புதுக்கோட்டையானை எப்படியெல்லாம் வளையக் கட்டி வைத்திருக்கிறீர்.

**பிளாக்பர்ன்** :—கவர்னர் பெருமான் என்னை சென்னப் பட்டணத்திலிருந்து அனுப்பியதே அதற்காகத் தானே......

**அக்நியு** :—நீர் 'போடு தோப்புக்கரணம்' என்பதற்குள், 'எண்ணிக் கொள்ளுங்கள்... எத்தனை வேண்டும்' என்று போட ஆரம்பித்து விடுகிறான். 'ஆடு' என்பதற்குள் ஆடித்தீர்த்து விடுகிறான்.

**பிளாக்பர்ன்** :—பைத்தியக்காரன்!

[இருவரும் சிரிக்கின்றனர்.]

**— திரை —**

## காட்சி 33

காளையார் கோவில் காடு.

[கண்ணம்மா கல்லிலும் முள்ளிலும் நடந்து வருகிறாள். எதிர்ப்புறத்திலிருந்து 'முகம்மது கலீல்' என்பவன் வருகிறான். மூட்டை முடிச்சுகளுடன் தற்செயலாக அந்த வழி வந்த முனியம்மா, அவர்கள் இருவர் பேசுவதையும் ஒரு புதருக்கருகில் மறைந்து நின்று கேட்கிறாள்.]

**கண்ணம்மா** :—அய்யா! நீங்கள் எங்கே போகிறீர்கள்?

**கலீல்** :—காளையார் கோயிலுக்குப் போகணு'ம்மா! காடு மத்தியிலே வந்து அகப்பட்டுக் கொண்டேன்; வழி தெரியலே.

**கண்ணம்மா** :—நான் வழி சொல்கிறேன். எனக்கு ஒரு உதவி செய்யறீங்களா?

**கலீல்** :—ஒ! என்னால் முடிந்தால் செய்யறேன்.

**கண்ணம்மா** :—உங்களால் செய்ய முடிந்ததுதான்!

**கலீல்** :—சொல்லு'ம்மா... கட்டாயம் செய்யறேன்!

**கண்ணம்மா** :—நீங்க அங்கே மருது ராசாவை பார்க்க முடியுமா?

**கலீல்** :—(விழிப்புடன்) மருது ராசாவையா...

**கண்ணம்மா** :—ஆமாங்க... அவுகளிடம் ஒரு முக்கிய மான சேதி சொல்லணும்.

**கலீல்** :—(கூர்ந்து நோக்கி) முக்கிய சேதியா ?

**கண்ணம்மா** :—ஆமாம்... எனக்கு உங்களை முன்னே பின்னே தெரியாது. இருந்தாலும்......

**கலீல்** :—(நயத்துடன்) என் கூடப் பிறந்தவங்களா உங்களைநினைச்சு சொல்றேன். எதுவாயிருந்தாலும் சொல்லும்மா. நான் செய்யறேன்.

**கண்ணம்மா** :—ஒண்ணுமில்லிங்க. நாளைக்கு பறங்கிக் காரனுக காளையார் கோவில் மேலே படையெடுக்கப் போறானுகளாம். நம்ம மருது சாமியை சாக்கிரதையா இருக்கச் சொல்லணும்.

**கலீல்** :—சரி'ம்மா ! அவசியம் சொல்றேன்.

**கண்ணம்மா** :—எனக்கு அண்ணனைப் போல ஒருத்தரு ...ஆபத்தான நிலையில் இருக்காரு. அதனாலே தானுங்க நா(ன்) இப்படியே திரும்ப வேண்டியிருக்கு. இல்லேன்னா நானே கூட போய்ச் சொல்லுவேன்.

**கலீல்** :—நீ வருத்தப்படாம போ, ஆச்சி ! நான் போய் மருது சாமி காதிலே இப்பவே சேதியை போட்டுடறேன்...! ஆங்... வழி சொல்றேன்னியே... சொல்றியா...?

**கண்ணம்மா** :—(மேற்குப் பக்கம் காட்டி) இந்தப் பக்கமா நேராகப் போங்க. அங்கே ஒரு பெரிய மாமரம் இருக்கு. அதுக்கு கீழண்டை பக்கம் சுடலைக் காடு... அதைத்தாண்டி காட்டுப் புளியந் தோப்பிலே நுழைஞ்சு போனா கண்மாய்க்கரை தெரியும்... அப்புறம் காளையார் கோவில்தானே...?

**கலீல்** :—போதும்... போதும்...! இனிமே நான் போயிடுவேன். எனக்கும் இந்த வழி பழக்கம்தான். ஆனு, கொஞ்சம் வழி தவறிடுச்சு. இந்த இருட்டான புதரில் வந்து மாட்டிக்கிட்டேன்.

**கண்ணம்மா** :—அப்பொ, நான் வரட்டுங்களா? உங்களை நம்பிதான் போறேன்.

**கலீல்** :—அதைப்பற்றி என்னம்மா? ஒருத்தருக்கு ஒருத்தர் இந்த உதவி கூடவா செய்யக்கூடாது...

[கண்ணம்மா போகிருள். கலீல் திரும்புகிருன். முனியம்மா புதரிலிருந்து வெளியே வருகிருள்.]

**கலீல்** :—என்ன, காட்டிலே ஒரே பொம்பளை மயமா இருக்கு... நீ யாரம்மா?

**முனியம்மா** :—என் பேரு முனியம்மா...! நீங்க யாரோ... எனக்கு முன்னே பின்னே தெரியாது. இருந்தாதாலும், என் கூடப் பொறந்த சகோதரனு நினைச்சு, உங்களுக்கு ஒண்ணு சொல்றேன். அதைச் செய்தீங்கன்னு அப்புறம் நீங்க பணத்திலே புரளலாம்...

**கலீல்** :—என்ன'ம்மா...... புதிர் போடறே...!

**முனியம்மா** :—புதிர் இல்லை...... புத்தியுள்ளவங்க பொழைக்கற வழி...! இங்க வாங்க சொல்றேன்.

[அவன் காதில் ஏதோ சொல்கிருள். அவன் கண்கள் ஆச்சரியத்தால் விரிகின்றன.]

**கலீல்** :—அப்படியா...?

**முனியம்மா** .—ஆமா... ஒருவர் துன்பத்திலேதான் இன்ெனுருவர் இன்பம் விளேயுது...!வாங்க போவோம்...

[இருவரும் கண்ணம்மா காட்டிய திசைக்கு எதிர்த்திசையில்செல்கின்றனர்.]

— **திரை** —

## காட்சி 34 (அ)

1 அக்டோபர்—1801
மங்கலம்
பறங்கியரின் போர் முகாம்.

[கர்னல் அக்நியு, கர்னல் இன்ஸ், தொண்டைமான், கறுத்தான் முதலியோரின் எதிரில் முகம்மது கலீலும், முனியம்மாவும்...]

**முனியம்மா** :—ஆமாங்க, எசமான் ! நான்தான் இவரைக் கூட்டி வந்தேன். எல்லா இரகசியத்தையும் உங்க கிட்ட சொல்லிட்டோம். இனி நீங்க சொல்றபடி நடந்துக்கிரேம்.

**தொண்டை** :—அதுதான் அறிவுடையோருக்கு அழகு.

**கலீல்** :—மருதய்யங்க இருக்கிற இடத்தைச் சொல்றவங்களுக்கு நூறு பவுன் தருவதா சொன்னீங்களாமே... எங்களுக்கு பணம்...

**அக்நியு** :—தருகிரேம்! மிஸ்டர் இன்ஸ்! முனியம்மாவைச் சிறையில் வையுங்கள்......

**முனியம்மா** :—(திடுக்கிட்டு) எசமான்......

**அக்நியு** :—உஸ்... பேசாதே! உனக்கு அரசியல் விவகாரத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது. ஏய் கறுத்தான்! என்ன 'மேன்' நிக்கறே...?

[கறுத்தான் முனியம்மாவின் கைகளில் விலங்கைப் பூட்டிச் சிறைக்கு அழைத்துப் போகிறான்.]

**அக்நியு** :—(கலீலைத் தட்டிக்கொடுத்து) நீ பயப்படாதே, மிஸ்டர் கலீல்? நாளைக்கு மனம் மாறி, நம்மையும் மற்றவரிடம் காட்டிக்கொடுக்கக்கூடாது என்பதற்காகவே அவளைச் சிறையில் தள்ளினேன். பரிசைத் தருகிறோம்; நீ பெற்றுக்கொள்.

[பொன் முடிப்பைத் தருகிறான்.]

**தொண்டை** :—அடுத்த திட்டம்...?

**அக்நியு** :—எக்காளமிட்டுத்திரியும் அந்த விடுதலைப் பட்டாளத்தைப் பிடித்தாக வேண்டும். நேற்று கர்னல் ஸ்பிரே, கலீல் கூறிய வழியில் புறப்பட்டு விட்டார், அல்லவா? இன்று நான் முத்தூர் வழியாக காளையார் கோவிலுக்குச் செல்கிறேன். மிஸ்டர் இன்ஸ்...!

**இன்ஸ்** :—சார்......

**அக்நியு** :—நீர் தாளான்குடி கிரனூர் வழியாகச் சென்று தாக்குங்கள்.

**தொண்டை** :—முப் பெருந் தளபதிகள் மூன்று பக்கத்திலும் தாக்குகிறீர்கள்.

**அக்நியு** :—ஆம். மும்முனைத் தாக்குதல்... மூச்சு விடாமல் தாக்க வேண்டும்.

**தொண்டை** :—இன்றோடு காளையார் கோவில் போராட்டத்தின் கடைசி மூச்சு நின்று விடும்.

— திரை —

**காட்சி 34 (ஆ)**

— நிழற் காட்சி —

[பறங்கியருக்கும் மருது பாண்டியர்க்கும் பயங்கரப் போர். 'டுமீல்—டுமீல்' என்று துப்பாக்கிகள் சுடும் ஒலி.'டமார்... டமார்' எனப் பீரங்கிகள் வெடிக்கும் சத்தம்; எங்கும் ஒரே புகையும்... குழப்பமும்...! வாட்கள் ஒன்றோடு ஒன்று மோதி உராயும் ஒலி... பயங்கரமான முனகல்களும்சத்தங்களும் எழுந்து ஓய்கின்றன.]

**காட்சி 35**

நடு நிசி
காளையார் கோயில்
காடு

[மருது பாண்டியர், ஊமைத்துரை, துரைசாமி ஆகியோர். விடுதலை வீரர்கள்

சிலர் சுற்றி நின்று வெளிச்சத்திற்காகத் தீப்பந்தங்களை ஏந்தி நிற்கின்றனர்.]

**ஊமைத்துரை :—** முத்தய்யன்......நம்பிக்கையுள்ள ஒரு தொண்டன்...! நெடு நாட்களாகக் காணவில்லை... அவனை இழந்து விட்டோம்! காளையார் கோயில் ஒரே ஒரு பாதுகாப்பிடம்...அதையும் பறிகொடுத்து விட்டோம்! நெஞ்சு பொறுக்க முடியாத நிகழ்ச்சிகள்...!(வஞ்சத்துடன்) பரங்கிக்காரர்களின் இதயங்களைக் கிழித்து வழிந்தோடும் இரத்தத்தை அள்ளிக் குடித்தால்தான் என் சுதந்திரத்தாகம் தணியும்.

**பெ. மருது:—**தணியாத விடுதலைத் தாகத்தைத் தணித்துக் கொள்ள பிணக்குவியல்களிடையே புரளுவோம்; இரத்த வெள்ளத்திலே நீச்சலடிப்போம்...துவண்டு போன நம் தோள்களைத் தூக்கி நிறுத்திப் போராடுவோம்! உளுத்துப் போனவர்களும் உதவாக்கரைகளும் ஒன்று சேர்ந்து போராடினார்கள்......நாம் வீழ்ந்தோம்...! இப்போது தன்மானம் உள்ளவர்களும் தறுகண் ஆண்மை மிக்கவர்களும் வருமான நாம் பிரிந்து நின்று போராடுவோம்...சதிகாரர்கள் வீழட்டும்...! வெற்றி நமதாகட்டும்!

தம்பி சின்ன மருது! சிங்கம் நிகர் ஊமைத்துரை! மகனே துரைசாமி! மானமே பெரிதென வாழும் என் உயிர்த் தோழர்களே! நீங்கள் இப்போதே நாலா பக்கங்களிலும் ஒடுங்கள். பகலில் காடுகளில் பதுங்கியிருங்கள்...இரவில் நாட்டின் மூலை முடுக்குகளில், நமக்காகப் போராடத் துடித்துக் கொண்டிருக்கும் இளங்காளைகளை ஒன்று திரட்டுங்கள்

பெரும் படை ஒன்றை அமைப்போம். இந்தக் கணம் முதல் விடுதலைப் பட்டாளத்தைத் திரட்டுங்கள். வேலையில் இறங்குவோம். காளையார் கோயில் போய்விட்டதே என்று யாரும் கவலைப் படாதீர்கள். விரைவில் அதைக் கைப்பற்றுவோம்!

அனைவரும் பிரிந்து போங்கள்......பிரிவதற்கு முன்னால் ஒருவரை ஒருவர் கட்டித் தழுவிக் கொள்ளுங்கள். சுதந்திரம் பறிபோவதைக் கண்டு துடி துடிக்கும் இதயங்களை ஒன்றோடு ஒன்று ஒற்றி எடுத்துக் கொள்ளுங்கள். சுயமரியாதை நசுக்கப் படுவதைக் கண்டு தவியாய்த் தவிக்கும் உங்கள் தூய உள்ளங்கள் ஒன்றோடு ஒன்று பேசிக் கொள்ளட்டும்!

ஓடுங்கள்......மூலைக் கொருவராக ஓடுங்கள் ......ஆளுக்கொரு திசையில் ஓடுங்கள்...! நாம் மீண்டும் ஒன்று சேர்வதானால் வெற்றிச் செய்தியை ஒருவர்க்கொருவர் சொல்லிக் கொள்வோம்...தவறினால், விழுப்புண்பட்ட மார்போடு களத்தில் வீழ்ந்து மாள்வோம்!

**சி. மருது** :—விடுதலைப் பட்டாளத்தைத் திரட்டுவதற்கு இந்த நேரமே பிரிவோம். வெற்றிச் செய்தி... இல்லையேல் களத்தில் வீழ்ச்சி...! மானத்தோடு வாழ்வோம்...இல்லையேல் வீரத்தோடு வீழ்வோம்!!

[ஒருவர்க்கொருவர் தழுவிக் கொண்டு கண்களில் செந்நீர் கசிய ஒருவரை ஒருவர் விட்டுப் பிரிய மனமில்லாது வெவ்வேறு திசைகளில் பிரிகின்றனர்.]

**— திரை —**

## காட்சி 36

சிவகங்கை
அரண்மனை.

[தொண்டைமானும் படமாத்தூர் உடையத்தேவரும் மகிழ்ச்சியுடன் பேசிக் கொண்டிருக்கின்றனர். கறுத்தான் களை யிழந்த முகத்தோடு இருக்கிறான்.]

**தொண்டைமான் :**—இன்றுதான் என் உள்ளம் குளிர்ந் தது. என் கல்யாணத்தாலும் கிடைக்காத இன்பம் காளையார் கோயில் வீழ்ச்சியால் கிடைத்தது! மருது பாண்டியர் இறந்தார் என்ற சேதி கேட்டால் இன்னும் அதிகமாக மகிழ்ச்சியடைவேன்.

**தேவர் :**—இப்போது அவர்கள் சங்கராபதிக் காடுகளில் பதுங்கிக் கிடக்கிறார்களாம். அக்னியு துரைக்கு உளவு வந்திருக்கிறது.

**தொண்டை :**—கறுத்தான்...!

**கறுத்தான் :**—(சலிப்புடன்) சார்......!

**தொண்டை :**— முக்கியமான காடுகளைக் குறைந்த கவுலுக்கு விடு. மருது சேர்வைக்காரர்கள் காட்டில் உள்ள பாலைமரப் பொந்துகளில் பெட்டி பெட்டி யாகப் பொன்னை ஒளித்து வைத்திருக்கிறார்கள் என்று கதை கட்டி விடு. கிடைக்கும் பொன் அவரவர் களுக்கே சொந்தம் என்று மக்கள் மனத்திலே பேராசையை எழுப்பு. அவர்கள் இரண்டே நாட் களில் காட்டை வெட்டித் தீர்த்து விடுவார்கள்

காடு அழிந்தது என்றால், அந்தக் கல்நெஞ்சக்காரர் களும் ஒழிந்து விடுவார்கள். எல்லாப் புரளிகளையும் நீயே மக்களிடையே மூட்டிவிடு, கறுத்தான்!

**கறுத்தான் :**—(வெறுப்போடு) அந்த நல்ல காரியத்தை நீங்களே செய்யுங்கள், எசமான்!

**தொண்டை :**—(அதிர்ச்சி யுற்று) வாட்......வாட்......?

**கறுத்தான் :**—அந்த ஓட்டை இங்கிலீசு எனக்குக்கூட கொஞ்சம் தெரியும். நிறுத்துங்கள்! இனிமே பறங் கியருக்கு உதவியா என்னால் இருக்க முடியாது.

**தேவர் :**—ஆங்...! எப்போதிருந்து இப்படி மாறி விட்டாய்...?

**கறுத்தான் :**—என் உயிருக்கு உயிரான என் பெண் டாட்டி என்னை விட்டுவிட்டுப் போனதிலிருந்து!

[அவர்களை அநாவசியமாக நோக்கி விட்டு வெளியேறுகிறான்.]

**தொண்டை :**—ஹூம்...நமக்குக் கூடத்தான் வெள்ளைக் காரனுக மேல் வெறுப்பு இருக்கிறது. நாம் அதை வெளியில் காட்டிக் கொள்கிறோமா...இவன் ஒரு பைத்தியக்காரன்! தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக் கொள்கிறான்.

**தேவர் :**—அவன் கிடக்கிறான்! உங்களுக்கு ஒரு விசயம் தெரியுமோ...? மருது பயலுகளைப் பிடித்துத் தருப வருக்கு நாலாயிரம் பொன் பரிசு கொடுக்கப்படும் என்று அக்நியு துரை அறிக்கை விட்டார், அல்லவா?

**தொண்டை :**— சிவகெங்கையான்களைப் பிடிச்சுக் கொடுத்துட்டு, அந்த நாலாயிரத்தையும் தானே

தட்டிக்கொள்ள கர்னல் வெல்ஷ் இரவு பகலா வேலை செய்யருராம். இது எனக்கு முதலிலேயே தெரியுமே......

**தேவர் :**—வெல்ஷ் துரைக்கும், மருதுபயலுக்கும் உடல் ஒட்டின சிநேகிதமாமே...! பார்த்திங்களா...பணம் என்றதும் சிநேகிதமெல்லாம் பறந்து போச்சு......

**தொண்டை :**—அது தானய்யா......இன்றைக்கு இருக்கிற உலகம்...

— **திரை** —

## காட்சி 37

காளையார் கோயில்
காடு.

[முத்தய்யன் மார்பில்பட்ட புண், புரையோடி விட்டதால் நடக்க முடியாமல் தாங்க வொண்ணுத வேதனையோடு கீழே விழுந்து கிடக்கிருன். அந்த வழியாகச் சின்ன மருது வருகிருன்.]

**முத்தய்யன் :**—(வேதனையோடு) அம்மா...அம்மா...

**சி. மருது :**—(நின்று கவனித்து அருகில் வந்து) யார்... யார்...! முத்தய்யனு...? முத்தய்யா...முத்தய்யா...!

**முத்தய்யன் :**—(பேச முடியாமல்) எசமான்...!

**சி. மருது :**—(வாரி, மடியில் கிடத்திக் கொண்டு) உனக்கு ஏண்டா இந்த இழி நிலை...? இழி செயல்

புரிந்து வாழும் பழிகாரர்களெல்லாம்கூட இன்ப மாக இருக்கிறார்களே...... உண்மை விசுவாசம் கொண்ட உனக்காதோடா இந்தப் பரிதாப நிலை...

**முத்தய்யன்** :—மார்பில்பட்ட புண் புரையோடிப் போச்சிங்க, சாமி! மூச்சுகூட சரியா விட முடியலே, எசமான் !

**சி. மருது** :—அய்யோ......உன்னைப் பார்க்கவே என்னால் முடியவில்லையே...!பாய்ந்து வரும் ஈட்டியைக்கூட அநாவசியமாகத் தடுத்துக் கொள்ள முடியும் என் இதயத்தால், உன்னைக் காணும்போது ஏற்படும் வேதனை வெள்ளத்தைத் தாங்க முடியவில்லையேடா...

**முத்தய்யன்** :—ஒவ்வொரு கணமும் உங்களைக் கண்ணால பார்க்க மாட்டோமான்னு ஏக்க மடைந்து கிடைந்தேனுங்க...

**சி. மருது** :— இப்போது எப்படியிருக்கிறது, முத்தய்யா...!

**முத்தய்யன்** :—எசமான்...! நம்ம காளை......யார்...... கோயில்...

**சி. மருது** :—போய் விட்டதடா, அந்தப் பொக்கிஷம் !

**முத்தய்யன்** :—......ஆ......!

(மூர்ச்சையாகி விடுகிறான்.)

**சி. மருது** :—(திடுக்கிட்டு) முத்தய்யா...! முத்தய்யா...!

[கலக்கத்துடன் மூச்சு இருக்கிறதா என்று பார்த்து விட்டு, பின் திட சித்தம் அடைந்தவனாக எழுந்திருக்கிறான்.]

**சி. மருது** :—ஆயிரமாயிரம் இதயங்களில் வைத்துப் போற்றப்பட வேண்டிய உன்னை, நான் அனுதை யைப் போல விட்டுவிட மாட்டேன், முத்தய்யா! கூடிய வரை உன்னைக் காப்பாற்ற முயற்சிக்கிறேன்.

[அவனைத் தூக்கித் தோள் மேல் சாய்த்துக்கொண்டு நடக்கிருன்.]

— திரை —

## காட்சி 38

### காடு

[ஆடு மேய்க்கும் சிறுவர்களான குறுணியும் குண்டனும் கையில் கஞ்சிக் கலயத்துடன் இருக்கிருர்கள். அவர்களுடன் கண்ணம்மா......!]

**கண்ணம்மா** :— உங்களை நம்பிதானே தம்பி நான் அந்த அண்ணனை விட்டிட்டுப் போனேன். இப்போது ஒண்ணுமே தெரியாதுன்னு சொல்றீங்களே...

**குண்டன்** :—அதுதான் சொல்ருேமே, ஆச்சி! அவரு அன்னைக்கி ராத்திரியே யாரிடமும் சொல்லிக்காம போயிட்டாரு...! அதுக்கப்புறம் தேடித்தேடி பார்க்கிருேம்... கண்ணிலே தென்படல...

**கண்ணம்மா** :—நானும் அலேஞ்சு அலேஞ்சு பார்க்கிறேன்... அகப்படலேயே......! நேத்திலேருந்து சாப்

பிடல... பசி வேறே... இங்கேயிருந்து ரெண்டு கல் போனாதானே ஊர் இருக்குது.

**குறுணி** :—நாங்க இளைப்பு சாப்பாடு எடுத்து வந்தோம். ...அதிலே மீதி கூழ் இருக்குது... கொஞ்சம் குடிக்க றீங்களா...?

**குண்டன்** :—கொஞ்சம் என்னடா கொஞ்சம்...! அப்படியே கொடுத்திடலாம். இந்தாங்க ஆச்சி...

[கஞ்சிக் கலயத்தைக் கொடுக்கிறான்.]

**கண்ணம்மா** :—வேண்டாம் தம்பி வேண்டாம்...!

[எழுந்திருக்கிறாள்.]

**குண்டன்** :—எங்க மேல ஆணை! நீங்க இதை வாங்கிட்டுத்தான் போகணும்...! அந்தப் பக்கம் போனா தண்ணீர் இருக்கு... அங்கே போய் கூழை கரைச்சுக் குடிச்சுட்டு போங்க அம்மா...

[விருப்பமில்லாது மட்கலயத்தை வாங்கிக் கொண்டு போகிறாள்.]

**குறுணி** :—ம்... நான் மத்தியானம் கஞ்சி கொடுத்தா தான் ஆடு மேய்க்கப் போவேன்னு அழுதேன். எங்க பாட்டி பக்கத்து வீட்டிலே ஒரு செம்பு கூழ் வாங்கி வந்து கொடுத்திச்சு...! இதையே நாம ரெண்டு பேரும் திரவி குடிக்கலாமுன்னு பார்த்தா...

**குண்டன்** :—எலே, சவத்துப் பயலே! ஒருத்தருக்கு உதவி செஞ்சிட்டு சொல்லிக் காட்டாதேடா......

**குறுணி** :—சேச்சே! நீ என்னடா தப்பா நினைக்கறே...? நான் ஒன்றும் சொல்லிக்காட்டலே... ஊரு உலகம்

இருக்கிற இருப்பை சொன்னேன். ஆமா... அது போவட்டும்...! நம்ம மருது ராசாவுக கதை என்ன ஆச்சு...?

**குண்டன்** :—சொல்றேன்... எழுந்து வா! ஆடுக தொலை தூரம் போயிருச்சு... பேசிகிட்டே போவலாம்.

[புல்லாங்குழலை இனிமையுடன் ஊதி இசைத்துக் கொண்டே செல்கிறான்; குறுணி அவனைப் பின் தொடருகிறான்.]

— திரை —

## காட்சி 39

காளையார் கோயில் காடு

[நடந்து வந்த களைப்பால், கண்ணம்மா ஒரு மரத்தடியில் அமர்ந்து வியர்வையைத் துடைத்துக் கொண்டு, கூழைக் குடிப்பதற்காகக் கலயத்தின் மூடியை அவிழ்த்து அதன் விளிம்பை ஆவலோடு வாயருகில் எடுத்துச் செல்கிறாள். அப்போது...... பெருமூச்சு விட்டபடியே முத்தய்யனைத் தோளில் சுமந்து கொண்டு, பசியால் தள்ளாடியவாறு சின்னமருது வருகிறான். அவனால் நடக்கவே முடியவில்லை. சிறிய கல் ஒன்று இடறியதால் கீழே விழுந்து

உணர்விழந்து விடுகிறான். 'யாரோ' என்ற எண்ணத்துடன் கண்ணம்மா, கலயத்தைக் கீழே வைத்துவிட்டு எழுந்து ஓடிச் சென்று பார்க்கிறாள்... திடுக்கிடு கிறாள்...!]

**கண்ணம்மா** :—சாமி... சாமி...! அய்யோ கடவுளே! யானைமேலே அம்பாரி கட்டி அமர்ந்துவர வேண்டி யவர், பசியால் களைச்சு உணர்வில்லாம கிடக்கி றாரே... இது எந்த தெய்வத்துக்கு அடுக்கும்...? சின்ன அய்யா... சின்ன அய்யா! சாமி...! சாமி...!

[முகத்தைத் திருப்பிப் பார்த்துவிட்டு, ஓடிச் சென்று கலயத்தை எடுத்து வந்து, கூழை அவன் வாயில் புகட்டுகிறாள். சின்ன மருது சற்று நேரங்கழித்து உணர்வு பெற்று மெல்ல எழுந்து அமர்கிறான்.]

**சி. மருது** :—நீ யார் அம்மா...?

**கண்ணம்மா** :—என் பெயர் கண்ணம்மா, சாமி...!

**சி. மருது** :—பொருத்தமான பெயர், அம்மா! துன்பப் படுவோரின் துயரைப் போக்குவதில் நீ கண்போன்ற வள். பசியால் போக இருந்த என் உயிரைப் பிடித்து நிறுத்திய நீ எனக்குக் கண்தான், அம்மா!

**கண்ணம்மா** :—இன்னும் கொஞ்சம் சாப்பிடுங்க, சாமி...!

**சி. மருது** :—இரு, கண்ணம்மா! முத்தய்யனுக்குக் கொடுக்கலாம்...!

[கவனம் வரப்பெற்றவனாக, முத்தைய்யன் அருகில் சென்று பார்க்கிறான்.]

**சி. மருது** :—(துடிப்புடன்) முத்தய்யா...! முத்தய்யா...!!

**கண்ணம்மா** :—(அருகே சென்று, பார்த்து) ஆ... முத்தண்ணாவா ? அண்ணாச்சி... அண்ணாச்சி...

[முத்தய்யனைப் புரட்டிப் பார்க்கிறார்கள். அந்த நல்ல மனிதனின் மூச்சு நின்றுவிட்டிருக்கிறது.]

**கண்ணம்மா** :—அட கடவுளே! இந்தப் பாழாய்ப்போன காட்சியைப் பார்க்கவா என்னை உயிரோடு வைச்சிருந்தே...? என் கண்கள் இன்னும் அவியலையே... அட பாழும் தெய்வமே...!

**சி. மருது** :—(கண்களில் வழியும் நீரைத் துடைத்துக் கொண்டே) அழாதே, கண்ணம்மா! இந்த நன்றி கெட்ட உலகத்தில் நல்லவர்கள் முடிவே இப்படித் தான் பரிதாபகரமானதாக இருக்கிறது.

[திடீரென்று நான்கைந்து சிப்பாய்களுடன் கர்னல் வெல்ஷ் வருகிறான்.]

**வெல்ஷ்** :—நான் ஆமோதிக்கிறேன், மிஸ்டர் சின்ன மருது !

[...என்று சொல்லிக் கொண்டே, வளரித் தடியால் மருதரசனின் வலது தொடையில் ஓங்கி அடிக்கிறான். மருது தரையில் சாய்கிறான். நிராயுதபாணியாக எழுந்து நிற்க முயலும் மருதுவின் மார்பில் ஈட்டி

முனைகளைப் பதியவைத்து நிற்கின்றனர், சிப்பாய்கள். எதிர்பாராத தாக்குதலால் அதிர்ச்சி யடைந்த கண்ணம்மா ஒருவனுடைய ஈட்டியைப் பிடுங்கிக்கொண்டு, பயங்கரமாகக் கத்துகிறாள்.]

**கண்ணம்மா** :—(ஆவேசத்துடன்) என் உயிர் இருக்கும் வரை எங்க ராசாவை நெருங்காதீர்கள் ; நெருங்கினால் பிணமாகிவிடுவீர்கள் !

**வெல்ஷ்** :—யார் இவள், இடியட்...!

[கைத் துப்பாக்கியால் அவளைச் சுடுகிறான். கண்ணியமே உருவான அந்த வீராங்கனை சுருண்டு விழுகிறாள். ஆனால் அவள் எறிந்த ஈட்டி வெல்ஷின் மார்பில் தைத்து விடுகிறது. இரத்தம் கொட்டுகிறது, மார்பிலிருந்து.)

**வெல்ஷ்** :—(மார்பை அழுத்திப் பிடித்துக்கொண்டு) ம்... அவரைக் கைது செய்யுங்கள் !

[சிப்பாய்கள் மருதுவின் கைகளில் விலங்கைப் பூட்டுகின்றனர்.]

**சி. மருது** :—(சீற்றத்துடன்) வெல்ஷ்......

**வெல்ஷ்** :—சீறவேண்டாம், மிஸ்டர்...! சின்ன மருதுவின் தோழனாக இருந்த வெல்ஷ் செத்துவிட்டான்.

**சி. மருது** :—தெரியுமே, எனக்கு ! நான்காயிரம் பணத்திற்காக நீ எப்போதோ நன்றி கெட்டவனாக மாறிவிட்டாய்... நமக்குள் இருந்த நட்பை என்றைக்கோ கொன்றுவிட்டாய்...!

[வெல்ஷ் தலைகுனிந்து மெல்ல அப்பால் நகர்ந்து செல்கிறான். மருதரசன், மானத்திற்காக உயிர் துறந்த கண்ணம்மா, முத்தய்யன் ஆகிய இருவர் உடல்களுக்கருகில் சென்று மண்டியிட்டுத் தன் கடைசி வணக்கத்தைச் செலுத்திவிட்டு, அத்தீயோர் நடுவண் சிங்க ஏறு என நடந்து செல்கிறான்.]

— திரை —

## காட்சி 40

காளையார் கோவில் காடு
கண்ணம்மா இறந்த இடம்.

[குண்டனும், குறுணியும், மனம் மாறுபட்டுக் கண்ணம்மாவைத் தேடிக் கொண்டு வந்த கறுத்தானை அழைத்து வருகின்றனர்.]

**குண்டன் :**—ரொம்பவும் நல்லவங்க அந்த ஆச்சி ! நேற்று உச்சிப் பொழுதுக்கு நாங்க கூழ் கஞ்சி கொடுத்தனுப்பினோம். மாலையில் ஆடு ஓட்டி வர்றப்போ இந்தக் கோரத்தைப் பார்த்தோம். (கண்ணீரைத் துடைத்துக் கொண்டு) இதோ... இந்த அம்மாவா பாருங்க...?

**கறுத்தான் :**—(பிணத்தைப் பார்த்துவிட்டு) ஆமாம், இவளேதான். கண்ணம்மாவேதான்...

[குண்டனும் குறுணியும் தேம்பித் தேம்பி அழுகின்றனர்.]

**கறுத்தான் :—**(மனங் கதறி) கண்ணம்மா... கண்ணம்மா...! என்னால் தானே நீ இந்த நிலைக்கு ஆளாயிட்டே...? உன்னை கண்ணின் கருமணியாய்... கற்பூரப் பெட்டகமாய்ப் போற்றி வந்தேனே...! என் வாழ்வின் வழிகாட்டியாய்... வழி காட்டும் ஒளி விளக்காய்த்தான் நீயும் என்னைக் கண்காணிச்சு வந்தே...! எப்படியோ நான் பறங்கிக்காரனுக விரிச்ச வலையில் விழுந்துட்டேன். புத்தி தடுமாறி, உன்னை வாயில் வந்தபடி பேசினேன்; என் கை நோக அடிச்சேன்...! பணத்திற்கு ஆசைப்பட்டு உன் மனம் புண்ணாகும்படி உன்னை நடத்தினேன். அப்போதுகூட நீ படிச்சு படிச்சு சொன்னே...! பாவி நான்... கேக்காமே போயிட்டேன்! நான் கல் நெஞ்சக்காரன்... எனக்கு நல்ல புத்தி வரணும்னு நீ உன்னையே தியாகம் செஞ்சுட்டியா, கண்ணம்மா!

இப்போது, நான் நல்லவனாக மாறி வந்திருக்கிறேன், கண்ணம்மா! நீ என்னை விட்டுப் பிரிந்தது முதல், என்னையறியாமலேயே தாய் நாட்டுப் பற்று என் உள்ளத்தில் எழுந்தது. நம்ம தமிழ் சாதி... நம்ம தமிழ் மண்ணு... நம்ம தமிழ் இனம் என்ற உணர்ச்சிகள் தோன்றின. நான் சொந்த புத்தி உள்ளவனாக... சுயமரியாதை உள்ளவனாக மாறி விட்டேன்! இப்போது என்னிடம் பேசு கண்ணம்மா... பேசமாட்டாயா? உன் கண்களைத்

திறந்து என்னைப் பார் கண்ணம்மா... பார்க்கமாட்டாயா? இனத்துரோகியான நம் கணவனை எந்த முகத்தோடு பார்ப்பது என்ற எண்ணத்தால் கண்களை மூடிக்கொண்டாயா, கண்ணம்மா! அய்யோ...! கொடியவனின் குண்டுபட்டு, நீ குற்றுயிரும் குலையுயிருமாகக் கிடந்தபோது உன் பேதை நெஞ்சம் எதை எதை நினைத்ததோ... ஆவி பிரிந்த நேரத்தில் எப்படி எப்படித் துடித்தாயோ...

[கதறிக்கொண்டே அவள் பிணத்தின் மீது விழுகிறான். அவன் கண்ணெதிரில் முத்தையன் பிணம் தென்படுகிறது. எழுந்து சென்று, முத்தையன் கால்களைக் கட்டிக்கொண்டு,]

முத்தையா... முத்தையா... உத்தமனே...!

[என்று கதறிக் கண்ணீர் விடுகிறான். இரண்டு பறங்கி சிப்பாய்கள் வந்து கறுத்தான் கைகளைப் பற்றி இழுத்துப் போகின்றனர். குண்டனும், குறுணியும் தமது கந்தல் துணியால் தங்கள் கண்ணீரைத் துடைத்துக் கொள்கிறார்கள்.]

— திரை —

## காட்சி 41

சிறைச்சாலை

[கைகளில் விலங்கிடப்பட்டுச் சின்ன மருது சிறையில் உள்ளான். வளரித் தடியால் தாக்கப்பட்டு முறிந்துபோன அவன் வலது தொடையில் கட்டு கட்டப் பட்டுள்ளது. சரியாக நிற்கமுடியாமல் தத்தளித்துக் கொண்டிருக்கிறான். அப் போது, கர்னல் வெல்ஷ் தன் மார்பில் பட்ட புண்ணுக்கு மருந்து இட்டுக் கொண்டு வருகிறான்.]

**வெல்ஷ் :**—வணக்கம், மிஸ்டர் சின்ன மருது...!

[சின்ன மருது கர்னலின் முகத்தை ஆழ்ந்து பார்த்து மெல்லப் புன்னகை புரிகிறான்.]

**சி. மருது :**—நலமா, தோழரே !

**வெல்ஷ் :**—(கம்மிய குரலில்) உடல்தான் நலம் ; உள்ளம் நைந்து கிடக்கிறது.

**சி. மருது :**—(குத்தலாக) ஏன் ? என்னைப் பிடித்துக் கொடுத்ததால் உமக்குக் கிடைக்கவேண்டிய நாலா யிரம் பொன்னும், சாதாரண சிப்பாய்களுக்குப் போய்விட்டதே என்ற குமைச்சலா...?

**வெல்ஷ் :**—இல்லை...!

**சி. மருது** :—சிவகங்கை சேர்வைக்காரன் சின்ன மருதுவை நண்பன் என்றும் பாராமல் கைது செய்ய நேர்ந்ததே என்ற சோர்வா...?

**வெல்ஷ்** :—இல்லை... பிரபு... இல்லை...

**சி. மருது** :—(வேகமாக) வேறென்ன காரணம்? பாய்ந்து வரும் வேங்கையையும் வீழ்த்திய நான் தொடை எலும்பு நொறுக்கப்பட்டு எழுந்து நிற்கவும் முடியாமல் தத்தளிக்கிறேனே என்ற ஆதங்கமா? வேலையும் வில்லையும் தாங்கி வீரப்போர் புரிந்த என் கைகளில் இரும்பு விலங்கு பூட்டப்பட்டிருக்கிறதே என்ற அனுதாபமா...? அழகான சிம்மாசனத்திலே அமரவேண்டிய சிவகெங்கைச் சீமான் சிறைக் கூடத்தில் சீரழிந்து கிடக்கிறானே என்ற சிந்தாகூலமா...? இந்தக் காரணங்களும் இல்லையென்றால் பொன்னுக்காகவும் பதவிக்காகவும் ஆசைப்பட்டு நட்பைக் கொன்றுவிட்ட மாபாதகன் என்று உம்மைப் பார்ப்பவர்கள் பழிப்பார்களே என்ற அச்சமா...?

**வெல்ஷ்** :—(கலங்கும் கண்களுடன்) இ...ல்...லை... தோழரே!

**சி. மருது** :—(சினத்துடன்) அதுவும் இல்லை யென்றால், உமது உள்ளம் நைந்து கிடப்பதற்கு வேறென்ன காரணம் இருக்க முடியும்...? நான்... சொல்லுகிறேன்......

**வெல்ஷ்** :—வேண்டாம்... நீங்கள் எதையுமே சொல்லாதீர்கள்...!எதையாவது சொல்லிச்சொல்லி உடைந்து

போன என் இதயத்தை மேலும் மேலும் உருக்குலைத்து விடாதீர்கள்...

**சி. மருது** :—இவ்வளவு சங்கடப்படும் நீர் எதற்காக என்னைச் சந்திக்க வந்தீர்...?

**வெல்ஷ்** :—எத்தனையோ காரணங்கள் இருக்கின்றன...! ஆனால், எதைச் சொல்வது என்றுதான் தெரியவில்லை...

**சி. மருது** .—(அலட்சியமாக அவனைப் பார்க்கிறான்.)

**வெல்ஷ்** :—எனது கீழான செயலால் என் மனமே என் மனத்தைக் கொல்கிறது.

**சி. மருது** :—நீரே உம்மைத் தேற்றிக் கொள்ளலாம்...!

**வெல்ஷ்** :—மன்னிப்புக் கோரி தங்களிடம் வந்தேன் ; மன நோய்க்கு மருந்திடுங்கள்...

**சி. மருது** :—என்னால் முடியாது, தோழரே ! எங்கள் சீமையை இழந்த பிறகு, நான் என்னென்ன அனுபவங்களைப் பெற்றேன் என்பது எனக்கே தெரியவில்லை. நான் என்னைப் பற்றியே மறந்துவிட்டேன்; எங்கள் சொந்த ஜமீனை மீண்டும் பெறுவதற்கு என்னென்ன செய்யவேண்டும் என்று சிந்திப்பதற்குக் கூட சக்தியில்லாமல் இருக்கிறேன்.

**வெல்ஷ்** :—பகைவனிடமும் அன்பு காட்டும் பண்பு கொண்ட தாங்கள், என்னை எப்படியாவது மன்னியுங்கள்.

**சி. மருது** :—நான் உம்மை மன்னிக்க வேண்டிய அவசியமில்லை !

**வெல்ஷ்** :—ஆ...! இக்கட்டான இந்த நேரத்தில், 'ஆங்கிலேயர்களும் மனித உள்ளம் உள்ளவர்கள்தான்... நானும் செய்த தவறுக்குப் பிராயச்சித்தம் தேடிக் கொள்ள விழையும் நல்ல இதயம் படைத்தவன் தான்......என்பதைக் காட்டிக்கொள்வதற்காகத் தங்களிடம் வந்திருக்கிறேன்' என்று தவருகக் கருதுகிறீர்களா?

**சி. மருது** :—நீர் எனக்கு எவ்விதத் தீங்கும் இழைக்கவில்லை.

**வெல்ஷ்** :—மறைக்க வேண்டாம், பிரபு! நான் எவ்வளவோ தவறுகளைச் செய்திருக்கிறேன். நான் மதுரையில் சுபேதாரக இருந்தபோது, முத்தய்யன் மூலமாக மூட்டை மூட்டையாக அரிசியும், வண்டி வண்டியாகச் சுவை நிரம்பிய பழங்களையும் அனுப்பியிருக்கிறீர்கள்.

**சி. மருது** :—அவை, நானே திரும்பவும் நினைத்துப் பார்க்கக்கூடாத நிகழ்ச்சிகள். பிறருக்குச் செய்த உதவிகளைப் பட்டியல் போட்டுக் கணக்குக் காட்டும் பழக்கம் எங்களுக்கு இல்லை. யாருக்காவது உதவி செய்தால் அந்தக் கணத்திலேயே அதை மறந்துவிடுவோம்; மற்றவருடைய உதவியைப் பெற்ருல் இறக்கும்வரை நெஞ்சில் நிறுத்தி வைப்போம்.

**வெல்ஷ்** :—நான்தான் நெஞ்சில் நிறுத்தி வைக்காத பாவியாகிவிட்டேன்; வெள்ளைக்காரர்கள் விரோதிகளாக இருந்தும், என்னை உள்ளன்புடன் நேசித்துவந்த தங்கள் உயர் குணத்தை மறந்து விட்டேன்.

**சி. மருது** :—அதற்காக, உம்மைப் பற்றி நான் தவருக நினைத்துக் கொள்ளவில்லை...

**வெல்ஷ்** :—யாவற்றுக்கும் மேலாக, தமிழ் நாட்டுப்போர் முறைகளை எனக்குக் கற்றுத் தந்தீர்கள். எந்தக் கலையைத் தங்களிடம் பயின்றேனே, அந்தக் கலை யாலேயே தங்களை வீழ்த்த நேரிட்டது. என்னை யறியாமலேயே ஏதோ ஒரு வெறி கொண்டு, அன்று வளரித்தடியை வீசித் தங்கள் தொடையை முறித்து விட்டேன்......

**சி. மருது** :—தோழரே ! நான் இன்று ஏதோ சிறையில் கிடப்பதால் வேறு வழியில்லையே யென்று உம்மிடம் இவ்வளவு அமைதியாகப் பேசி முகஸ்துதி செய் கிறேன் என்று எண்ணிவிடாதீர் ! உண்மையிலேயே சொல்கிறேன்...நீர் வளரித்தடியைப் பயன்படுத்தும் கலையில் நல்ல தேர்ச்சி பெற்றிருப்பதைக் கண்டு பெருமைப்படுகிறேன். காரணம், நான் உமது ஆசிரியன், அல்லவா ?

**வெல்ஷ்** :—உண்மைதான் ! நான் தங்கள் மாணவன் என்பதை எந்த இடத்தில் வேண்டுமானுலும் சொல் வேன்; யார் முன்னிலையில் வேண்டுமானுலும் ஒப்புக் கொள்வேன்...! உங்களை ஒன்று கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். நான் தங்களைக் கைது செய்தது என் கடமையின் பொருட்டு என்று இந்தக் கோர மான சம்பவத்தை மூடி மழுப்பிவிட நான் ஆசைப் படவில்லை. கவர்னரிடமிருந்து வந்த கண்டிப்பான உத்திரவால் நிராயுதபாணியாக இருந்த உங்களைத் தாக்கினேன். இப்போதுகூட தாங்கள் முயற்சி

செய்து இங்கிருந்து தப்பிவிட்டால், ஒரு காலத்தில் உங்கள் நண்பனாக இருந்தேன் என்ற காரணத்தால், என்மீது சந்தேகப்படுவார்கள்; எனக்குத்தான் தண்டனை தருவார்கள். அந்தப் பயத்தால்தான் இப்போது தங்களுக்கு ஒரு சிறு சலுகைகாட்டக் கூட அச்சப்படுகிறேன்.

**சி. மருது** :—அஞ்சாதீர்கள். ஒரு சிறு சலுகையைக்கூட உம்மிடமிருந்து நான் எதிர் பார்க்கவில்லை.

**வெல்ஷ்** :—தங்கள் அன்பான மன்னிப்பு எனக்கு உண்டா......?

**சி. மருது** :—நிச்சயமாக உண்டு; உங்கள் கர்த்தரே உங்களை மன்னிப்பார்!

**வெல்ஷ்** :—இந்த வார்த்தைகள் தங்கள் வாயிலிருந்து முழுமனத்துடன் வெளி வந்திருந்தால், நான் உள்ள படியே ஆறுதல் பெற்றவனாவேன்.

**சி. மருது** :—நல்ல இதயத்தோடு சொல்லப்போனால், எங்கள் தோல்வி எங்கள் சிறு படையின் பலக் குறைவாலேயே ஏற்பட்டது. அதற்காக, வெற்றி யடைந்த உங்களைக் கண்டு பொறாமைப்படவில்லை; நான் பூசல் கொள்ளவில்லை.

**வெல்ஷ்** :—தங்களால் நான் ஒருவாறு அமைதியடை கிறேன். சட்டவரம்பிற்கு அப்பாற்பட்ட உதவி ஏதாவது செய்யமுடிந்தால் உங்களுக்கு மகிழ்ச்சி யோடு செய்வேன்...!

**சி. மருது** :—எந்த உதவியும் நான் கேட்கவில்லை. என் ஆருயிர் அண்ணனைப்பற்றியும், அன்பு நண்பர்

ஊமைத்துரை பற்றியும் செய்தி கிடைத்திருந்தால் தெரிவியுங்கள். அதுவேபோதும், எனக்கு......!

**வெல்ஷ்** :—(வருத்தத்துடன்) மருதரசரே! துக்ககரமான அந்தச் செய்தியை மட்டும் என்னைக் கேட்காதீர்கள்.

**சி. மருது** :—அப்படி யென்றால்......

**வெல்ஷ்** :—(தலை குனிந்து) அப்படி...யென்...றால்...?

**சி. மருது** :—அவர்கள் பிடிபட்டு விட்டார்களா...?

**வெல்ஷ்** :—ஆம்...! அக்கினியுதுரை அவர்களைப் பிடித்து விட்டார்......

**சி. மருது** :— (அதிர்ச்சியுடன்) ஆ...ஊமைத்துரை... ஊமைத்துரை...!

**வெல்ஷ்** :—(அச்சத்துடன், மெல்ல) மருதரசரே...! பிரபு...!

**சி. மருது** :—(சிறைக் கம்பிகளில் தலையை மோதிக் கொண்டு) அண்ணா...அண்ணா...! வெங்கொடுமைச் சாக்காட்டில் விளையாடிய உங்கள் வெற்றித் தோள் கள் இன்று எங்கே...அண்ணா! எங்கே அண்ணா. அந்த வெற்றி...? என்னைப்போல நீங்களும் சிறை யில் கிடக்கிறீர்களாமே......! நெஞ்சமே...! நீ ஏன் இன்னும் வெடித்துப் போகவில்லை...! எதற்காக இன்னும் உயிர்ப்புடன் இருக்கிறாய்...? அய்யோ... அண்ணா... அண்ணா !!

**வெல்ஷ்** :—(நடுக்கத்துடன்) பிரபு...பிரபு...!

[சின்ன மருது சிறைக் கம்பிகளைப் பிடித்தவாறே ஆகாயத்தை வெறித்து

நோக்கிக் கொண்டிருக்கிறான். அவ னுடைய கலங்கிப்போன நெஞ்சத்தைக் கண்டு, கசங்கிய கண்களிடையே கண் ணீர் வழிய, அப்பால் நகர்கிறான் — வெல்ஷ்.]

— திரை —

## காட்சி 42

கம்பெனி முகாம்
ஒரு கூடாரத்தில்......

[கர்னல் அக்நியு, புதுக்கோட்டை தொண்டைமான், படமாத்தூர் தேவர் மூவரும் உள்ளனர். மகம்மது கலீல் கைகட்டிக்கொண்டு நிற்கிறான்.]

**தொண்டைமான் :**—(கர்னலை நோக்கி) உண்மைதான், சார்! பாதிராத்திரியில் மருது பாண்டியர் சிறையி லிருந்து தப்பியோடி விட்டதாகக் கனவு கண்டேன்; அதற்குப் பிறகு தூக்கமே வரவில்லை. எங்கள் மாளிகையின் தூணைப் பார்த்தாலும் துரும்பைப் பார்த்தாலும் அந்தப் பயலுகளைப் பார்ப்பதைப் போலவே பிரமைதட்டியது.

**தேவர் :**—தூக்கத்தின்போதுகூட மிரண்டு மிரண்டு வாய் வெருவினுருங்க......

**அக்நியு** :— (சிரித்து) இன்னுமா மிஸ்டர் புதுக் கோட்டை, அவர்களை நினைத்துப் பயப்படுகிறீர்... அவர்கள் தான் சிறையில் இருக்கிறார்களே...

**தொண்டை**:—அதென்னவோ, சார்! எமனே எதிரில் வந் தால்கூட பயப்படமாட்டேன். அந்த அயோக் கியப் பயலுகளை நினைச்சாலே 'பகீ'ரென்கிறது......

**தேவர்** :—அத்தாட்சிக்குப் பாருங்களேன்...அவர்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கும் போதே புதுக் கோட்டையாருக்கு வியர்வை விட்டு, சட்டையெல் லாம் நனைந்து விட்டது......

[அனைவரும் சிரிக்கின்றனர்.]

**தொண்டை** :—எனக்குத் தெரிந்தது...அவர்கள் உடலை அணு அணுவாக வெட்டிச் சிதைக்க வேண்டும், சார்...!

**அக்நியு** :— உடலைச் சிதைப்பதைவிட, உள்ளத்தை வெட்டிச் சித்திரவதை செய்யவேண்டும். அதற்கு ஏற்பாடு செய்திருக்கிறேன். அண்ணனையும் தம்பியையும் ஒன்றாகச் சந்திக்க வைப்போம்...... அவர்கள் படும் வேதனையை நாம் மறைந்து நின்று ரசிப்போம்......வாருங்கள் !

(அனைவரும் புறப்படுகின்றனர்.)

— திரை —

## காட்சி 43

சிறைக்கூடம்.

[துப்பாக்கி தாங்கிய நான்கு வீரர்கள், பெரிய மருதுவைக் கை விலங்குடன் அழைத்து வந்து...சின்ன மருது இருக்கும் அறையைத் திறந்து விடுகின்றனர். **சின்ன மருது வைராக்கியமான மனத்துடன் கடைசிவரை தன் அண்ணனைத் திரும்பியும் பார்க்கவில்லை.........!** பெரிய மருது தன் தம்பியின் நிலை கண்டு கதறிக் கதறி அழுகிறான்! தொண்டைமான், தேவர், அக்நியு மூவரும் சுவர் மறைவில் நின்று அவர்களுடைய உரையாடலைக் கவனிக்கின்றனர். அக் கொடியவர்களின் முகம் படிப்படியாக மாறுபடுகின்றது.]

**பெ. மருது :—**தம்பி...தம்பி!! காணக் கண் கூசும் இந்த இழிவான நிலையிலாடா நான் உன்னைக்காண வேண்டும்......? தீராதி தீரனான நீ, சிறகொடிந்த பறவையாகச் செயலிழந்து கிடக்கும் இந்த நிலையிலாடா நான் உன்னைப் பார்க்க வேண்டும் ?

**சி. மருது :—**(அண்ணனைத் திரும்பிப் பார்க்காமலேயே, விசும்பலுடன்) சும்மா இருங்கள், அண்ணா...! வீரத்திற்குப் பேர்போன நாம் இருவரும் இப்படி வெந்துபோன இதயங்களால் பேசிக் கொள்வதை யாராவதுபார்த்துவிட்டால்,நம்மைக் கேலிக்குரியவர்களாக நினைத்து விடப் போகிறார்கள்......

**பெ. மருது** :—குமுறிக் கிடக்கும் என் இதயத்தைக் கொடியவர்களின் மத்தியில் காட்டிக் கொள்ளக் கூடாது என்று தானடா எண்ணுகிறேன். ஆனால், பொறுக்க முடியவில்லையே என்றால்......! உன் ஒடிந்துபோன காலைக் காணும்போது பேசாமல் இருக்க முடியவில்லையே என்றால்......

**சி. மருது** :—கூற்றுவனையும் ஒழித்துக் கட்டுவீர்களே, அண்ணா... கூர் வாள் ஒன்றைக் கையில் கொடுத்தால்......! நீங்களா இப்படிப் பேசுகிறீர்கள் ?

**பெ. மருது** :—ஆமாம், தம்பி ! நானே தான் பேசுகிறேன். மதமேறிய மனம் எங்கே......காட்டிக் கொடுக்கும் கயமைக் குணம் எங்கே......சூது எங்கே......வாது எங்கே......சூழ்ச்சியும் பொறாமையும் எங்கே எங்கே என்று உன் கரத்திலே துள்ளி விளையாடிக் கொண்டிருக்குமே வேலும் வாளும்......! அவற்றை இழந்துவிட்டு இங்கே வீணர்கள் பூட்டிய விலங்குடன் சுத்த வீரனாகிய நீயே நிற்கும்போது நான் வேறு எப்படியடா பேச முடியும்......?

**சி. மருது** :—(கசிந்துருகும் இதயத்துடன்) அண்ணா! ஏன் அண்ணா என்னைப் பார்க்க வந்தீர்கள்? ஏற்கனவே, நீங்கள் பிடிபட்ட செய்திகேட்டு மனம் பொருமிக் கிடக்கும் என்னால் தங்களிடம் பேசவே முடியவில்லையே......

**பெ. மருது** :—என்னிடம் பேசவேண்டாம்...இப்படித் திரும்பி உன் வீரத் திருமுகத்தை எனக்குக் காட்டு,

தம்பி ! என் கண்களிலிருந்து வழிந்தோடும் கண்ணீராவது ஒரு கணம் நிற்கட்டும் !

**சி. மருது** :—வேண்டாம், அண்ணு! என்னை அன்போடு மன்னித்து விடுங்கள். பகைவர்களை ஒழிப்பேன் என்று வாளெடுத்துச் சூளுரைத்தபடி, வெற்றித் திருமுகத்தைக் காட்டாமல் இப்போது வகை கெட்டுச் செயலற்று நிற்கும் உங்கள் தம்பியின் களை யிழந்த முகத்தை நீங்கள் பார்க்கவே வேண்டாம், அண்ணு !

**பெ. மருது** :—என்ன தம்பி......! நன்றியைக் கொன்ற வர்......நயவஞ்சகர்......புறங்கூறுபவர்.....புன்மை இருள் சூழ்ந்த மனம் படைத்தவர் .....திருடர்...... தீயவர் எல்லாம்கூட ஒருவரை ஒருவர் சிரித்த முகத்துடன் பார்த்துக் கொள்கின்றனர்......! நாம் அறிவுக்கொவ்வாத எந்தக் காரியத்தையடா செய்துவிட்டோம்......நீ என்னைப் பார்க்க வெட்கப் படுகிருய்......?

**சி. மருது** :—(தத்தளிப்புடன்) அண்ணு! நான் உங்களி டம் ஆயிரம் ஆயிரமாகப் பேச வேண்டும் என்று தான் என் இதயம் எண்ணுகிறது; ஆனல், என்ன பேசுவது என்றே எனக்குத் தெரியவில்லை! கோடி கோடியான விஷயங்களைக் கூறவேண்டும் என்று தான் என் நாக்கு ஆசைப்படுகிறது ; ஆனல், அத ஞல் இப்படி அப்படிக்கூட புரளமுடியவில்லை ! கொள்ளை கொள்ளையாகப் பேசி மனத்துயரை ஆற்றிக் கொள்ளவே நினைக்கிறேன்; ஆனல், நினைவு வெள்ளத்தில் எதிர் நீச்சல் போட முடியாமல்

அடித்துச் செல்லப்படுகிறேன் ! கோரரூபத்துடன் கொதித்தெழுந்து என் உயிரை அரித்துக் கொண்டிருக்கும் சுதந்திர தாகத்தால் அணு அணுவாகச் செத்துக் கொண்டிருக்கிறேன்......அண்ணு!

**பெ. மருது** :—(இடைமறித்து) போதும், தம்பி...நிறுத்து! ஊமைத்துரையை இழந்தேன். நம் உயிரினும் இனிய உன் புதல்வர்களான சிவஞானம், துரைசாமியை இழந்தேன். பசியும் பட்டினியும் பாராது இரவு பகலாகப் போரிட்ட மறவர் குல திலகங்களை இழந்தேன். அனைவரும் சிறையில் வாடுகின்றனர் ! விடுதலைப் பட்டாளத்தின் முன்னேடியான முத்தய்யன் முடிவை அறிந்தேன்......கயவன் குண்டடி பட்டுக் களத்தில் உயிர்விட்ட கண்ணம்மாவின் சாவையும் உணர்ந்தேன்! பொன்னுனை உன் உள்ளம் மண்ணுசை கொண்ட மடையர்களால் புண்ணுகப் புலம்புவதையும் கேட்கிறேன். இவற்றிற் கெல்லாம் இளகாத என் இதயம் தானடா, உன் முகத்தைக் காட்ட மாட்டேன். என்று நீ கூறும்போது அனல் பட்ட மெழுகாய் உருகுகிறது......எதற்கும் கலங்காத என் கண்களில் கண்ணீர் ஊற்றெடுத்து ஆருகப் பெருகுகிறது !

**சி. மருது** :—முடிவாகச் சொல்கிறேன், அண்ணு! முடியுடை வேந்தர்களையும் புறமுதுகிட்டு ஓடச் செய்யும் வெற்றி வீரரான தங்கள் வீரத்திரு மார்பு வெறிச்சோடிக் கிடப்பதை, அஞ்சா நெஞ்சுடன் நிமிர்ந்து நிற்கும் தங்கள் நெடிய திருவுருவம் குணக் கேடர்களால் குன்றியிருப்பதை நான் பார்க்கவே.

மாட்டேன்......! பார்த்தால், என் கண்கள் அவிந்துவிடும்......என் உயிர் என்னை விட்டுப் பிரிந்துவிடும்......! அண்ணு......ஏதோ நப்பாசை யால் நான் இப்படிப் பேசவில்லை. என் எண்ணத் திரையில் தாங்கள் எப்போதுமே சுத்த வீரராக..... மலையையும் தகர்த் தெறியும் மாபெரும் வீரராக .... சூழ்ச்சிதனை வஞ்சகத்தைத் தொகையாக எதிர் நிறுத்தித் தூள் தூளாக்கும் மாண்பு மிக்க வீரரா கவே இருக்க வேண்டும் ! வேறு எந்தக் கோலத் திலும் நான் உங்களைப் பார்ப்பதற்குச் சம்மதிக்க மாட்டேன், அண்ணு......! சம்மதிக்கவே மாட் டேன்...அண்ணு...!

**பெ. மருது** :—சிவகெங்கைச் சீமை பறிபோனதைப் பற்றிக்கூட நான் கவலைப்படவில்லை, தம்பி! அது தீயோர் இழைத்த கொடுமையால் வந்த வினை. ஆனுல், என் சிந்தை நிறைந்த தம்பியாகிய நீ......

**சி. மருது** :—இரத்தமும் தசைப் பிண்டமும் சேர்ந்த இந்த அழியக் கூடிய எலும்புக் கூட்டிற்கா, அண்ணு......கவலைப்படுகிறீர்கள்......? அழியும் இந்த உலகத்தில் அழியாத புகழும்......விண்ணும் மண்ணும் வியந்து போற்றும் தமிழர் பண்பும்...... நமது பிறப்புரிமையான சுதந்திர வாழ்வும் மாய்ந்து விட்டபிறகு, நீங்கள் ஏன் அண்ணு பந்தத்தை பாசத்தை நினைத்துப் பரதவிக்கிறீர்கள்.........?

**பெ. மருது** :—(மெல்ல நகைத்து) என் ஐந்து மனைவி களையும் நான்கு பெண்களையும் நினைத்து அழாத மனம்தானடா உன் ஒருவனுக்காக அலமந்து வாடு

கிறது! மற்றபடி, பரங்கிக்காரர்கள் நமக்கு என்ன தண்டனை கொடுத்து விடுவார்களோ என்று நான் ஒரு சிறிதும் அஞ்சவில்லை, தம்பி......!

[சின்ன மருதுவின் முறிந்த தொடையை, மண்டியிட்டுப் பற்றிக்கொள்கிறான்.]

**சி. மருது :**—அண்ணா! என்னால் அதிக நேரமாக நிற்க முடியவில்லை. நீங்கள் செல்லுங்கள், அண்ணா...... ஒரு வேளை நான் இறக்க நேரிட்டால், அடுத்த ஜென்மம் என்று ஒன்று இருந்தால்......தமிழகத்தில் தமிழனாகவே பிறப்பேன்! அதுவும் தங்கள் தம்பியாகவே பிறப்பேன்! அண்ணா......தவிர்க்க முடியாத என் ஆவல் இது ஒன்றுதான்......அண்ணா....!

[பெரிய மருது சற்று நேரம் இருந்து, தம்பியின் தொடையில் கட்டப்பட்டுள்ள காயத்தைத் தொட்டுத் தன் கண்களில் ஒற்றிக்கொண்டு, வேதனையைக் கக்கும் விழிகளோடு மெல்ல வெளியேறுகிறான். அவன் மறைந்த பிறகு, சின்ன மருது தமையன் சென்ற திக்கு நோக்கியபடியே மூடப்பட்ட சிறைக் கம்பிகளைப் பிடித்துக்கொண்டு தரையில் சாய்கிறான். அவன் இதழ்களுக்கிடையில் 'அண்ணா... அண்ணா' என்ற சொற்கள் ஈனக் குரலில் இழையோடுகின்றன.

தூரத்தில் நின்று இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த அக்கினியு துரை, வேதனையுடன் தொண்டைமானைத் திரும்

பிப் பார்க்கிறான். தொண்டைமான், தன் விழிகள் சிந்திய நீரை விரலால் அகற்றுகிறான். படமாத்தூர் தேவர் துயரம் தோய்ந்த தன் முகத்தைத் தொங்கவிடுகிறார்.]

— திரை —

## காட்சி 44

ஒரு மாளிகை.

[படமாத்தூர் தேவரும் தொண்டைமானும்.]

**தேவர்:**—என் இரும்பு நெஞ்சத்தையும் இளக்கிவிட்டது, அந்தக் காட்சி!

**தொண்டை :**—அதை ஏன் மீண்டும் நினைவு படுத்துகிறீர்கள்......? என்னால்கூட துக்கத்தை அடக்கவே முடியவில்லை. விழிகள் சிந்திய நீருடன் வெள்ளைக்காரனை நிமிர்ந்து பார்க்கவும் முடியாமல் திணறி விட்டேன்!

**தேவர்:**—நம்மைப்போல கூலிக்கு வாங்கப்பட்ட அன்பா, அது...? இல்லையே...! இரத்தத்தோடு இரத்தமாகக் கலந்து உணர்வோடு உணர்வாக இழையோடிய பாசமல்லவா? அதனால்தான் அவர்களுடைய ஊனும் உயிரும் உருகி வழிந்தன,

**தொண்டை :**—என் பகைமைப் புகை கூட எங்கேயோ போய்விட்டது, தேவரே! நெஞ்சம் நெகிழ்கிறது,

அவர்கள் படும் வேதனையை நினைத்தால்......! ம்...
எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது......

**தேவர் :**—என்ன, தோழரே......!

**தொண்டை :**—பரங்கிக்காரருடன் சமாதானம் செய்து கொள்ளும்படி அவர்களுக்கு ஒரு தூதுவனை அனுப்புவோமே......

**தேவர் :**—அப்படியும் அனுப்பிப் பார்த்தேன். முடியாதாம்......? மறுத்துவிட்டார்கள்...! மானத்தோடு மடிந்தால் மடிவோமே தவிர, நாட்டை அடகு வைக்கும் ஈனத் தொழில் எங்களுக்கு வேண்டாம் என்றார்களாம்...

**தொண்டை :**—அப்படித்தானே வகை தெரியாமல், வெள்ளையரிடம் தலையைக் கொடுத்து விட்டு, இப்போது, அவர்கள் சொல்கிறபடி நாம் தாளம் போட வேண்டியிருக்கிறது.

**தேவர் :**—சரி... சரி... விடுங்கள்! பிறகு, கறுத்தான் கதி நமக்கு வந்துவிடப் போகிறது.

**தொண்டை :**—இன்றுதானே தீர்ப்பு கூறும் நாள். (சலிப்புடன்) வாருங்கள்... நாமும் உடன் இருந்து, அந்தக் கொடுமையை நிறைவேற்றி விடுவோம்.

— திரை —

## காட்சி 45

திருப்பத்தூர்
விசாரணை மன்றம்

[கர்னல் அக்நியு, கர்னல் வெல்ஷ், பிளாக்பர்ன் முதலிய வெள்ளையரும்...... தொண்டைமான், படமாத்தூர் தேவர், எட்டயபுரத்தான், முகம்மது கலீல் முதலியோரும் அமர்ந்துள்ளனர். விலங் கிடப்பட்ட நிலையில் சின்னமருது, ஊமைத் துரை, கறுத்தான், துரைசாமி முதலிய விடுதலை வீரர்கள் ஒரு புறமாக நிற்க வைக்கப்பட்டுள்ளனர். பெரிய மருது சங்கிலியால் பிணைக்கப்பட்டு இழுத்து வரப்படுகிறார்.]

**அக்நியு** :—மருது பாண்டியரே! இந்த அவை எதற் காகக் கூட்டப்பட்டிருக்கிறது தெரியுமா ?

**பெ. மருது** :—தெரியும்; விருது கட்டி வாழ்ந்த வீர மறவர் சரித்திரத்தைக் குழி தோண்டிப் புதைக்கக் கூட்டப்பட்டிருக்கிறது.

**அக்நியு** :—வழக்கு மன்றத்தின் நோக்கத்தை அறிந்திருப் பீர், நீர்...

**பெ. மருது** :—(இழிவுடன்) வகையற்றோரின் திருக்கூட் டத்திற்கு மற்றோர் பெயர் வழக்கு மன்றம் என்றால் முட்டாள்கூட சிரிப்பான்!

**அக்நியு** :—மூடு வாயை...!

பெ. மருது :—ஏன்? சூதும் வாதும் நிறைந்த உங்கள் வஞ்சக எண்ணத்தை இங்கே அம்பலப் படுத்தி விடுவேன் என்ற அச்சமா...?

அக்நியு :—இல்லை... சிவகங்கைச் சீமையின் அரசர் இங்கே சீரழிந்து, சிறப்பிழந்து நிற்கும் அவல நிலை யடைந்தும் வெட்கமில்லாமல் வீரகர்ச்சனை புரிகி ருரே என்று மற்றவர்கள் நினைத்துக் கொள்ளக் கூடாதே என்பதற்காக.

பெ. மருது :—ஆஹா...! ஆடு நனைகிறதே என்று அழுத தாம் ஓநாய்!

அக்நியு :—பேசத் தெரிந்து கொண்டாய்... அழகாகப் பேசுவதையே ஆயுதமாகக் கொண்டு எத்தனை நாட்கள் ஏமாற்ற முடியும்...?

பெ. மருது :—உங்களைப் போன்ற எத்தர்கள்தான் ஏமாற்றுவார்கள். அழகாகப் பேசுவதற்குப் பல தடவை முயன்றும் முடியாமற் போகவே, ‘சீச்சீ! இந்தப் பழம் புளிக்கும்’ என்று வீண்பல்லவி பாடுகிறீர்கள், நீங்கள்!

அக்நியு :—ஓ ஹோ...! (கிண்டலாக)... நீங்கள்...?

பெ. மருது :—நினைத்ததை முடித்து நிற்கும் ஆற்றல் படைத்தவர்கள்; நீதி எங்கள் பக்கம் இருக்கிறது...

அக்நியு :—நான் ஒப்புக்கொள்ள மாட்டேன்......

பெ. மருது :—மானங் கெட்டவரின் சூழலிலே சிக்கிக் கிடக்கும் நீர் ஒப்புக் கொள்ளாததில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

அக்நியு :—கண்டபடி பேச வேண்டாம்...

பெ. மருது :—கருத் தழிந்து உளற வேண்டாம்...

அக்நியு :—வார்த்தைக்கு வார்த்தை காரசாரமாகப் பேசி விட்டால், நீ செய்த குற்றம் மறைந்து விடாது...

பெ. மருது :—குற்றத்தைக் கூறாமல், இவ்வளவு நேரம் காலத்தைக் கடத்தியது உன் கோழைத் தனத்தை எடுத்துக் காட்டுகிறது...

அக்நியு :— நீ புரிந்த அடாத செயலை அடுக்கடுக்காகக் கூற முடியும். ஆனால், அதில் ஒன்றை மட்டும் சொல்கிறேன். நீ சிறுவயல் நகரத்திற்குத் தீ வைத்தாய்......

பெ. மருது :—எங்கள் ஊர், அது. அவசியம் நேரிட்டது......அழித்தோம்!

அக்நியு :—எங்கள் மதிப்பிற்குரிய நண்பர் புதுக்கோட்டை தொண்டைமான் அரண்மனைக்குச் சென்று பணம்கேட்டு மிரட்டியுள்ளீர்கள், நீயும் உன் தம்பியும் !

பெ. மருது :—இல்லை......! தமிழ்ப் பண்போடு வாழும் படி அந்தப் பகுத்தறிவில்லாதவனுக்கு எச்சரிக்கை செய்தோம்!

அக்நியு :—ஊரார் சொத்துக்களைக் கொள்ளையடித்து, காடுகளில் உள்ள பாலை மரப் பொந்துகளில் பதுக்கி வைத்தீர்கள்......

பெ. மருது :— பச்சோந்திகள் கட்டிவிட்ட பொய்க் கதை......

அக்நியு :— கம்பெனிக்குக் கப்பம் கட்ட மறுத்தீர்......

பெ. மருது :— உண்மை......

அக்நியு :—காரணம்......

பெ. மருது :—நாங்கள் யாருக்கும் இதுவரை கப்பம் கட்டிப் பழக்க மில்லை......

அக்நியு :—குறைந்த அளவில் கட்டும்படி சலுகைகூட அளித்தோம்......

பெ. மருது :—வயிற்றுப் பிழைப்புக்காகச் செழிப்பான நாடு தேடி ஓடிவந்த உங்களிடமா நாங்கள் சலுகை பெறுவது......?

அக்நியு :—நாவை அடக்கிப் பேசு......

பெ. மருது :—முடியாது......! முடியுடை மூவேந்தர்கள் ஆண்ட செந்தமிழ் நாட்டில் பிறந்த நான்...... ஒரு மொழி வைத்து உலகாண்ட செம்மல்கள் பிறந்த பூமியில் வளர்ந்த நான்......பண்பாடும் பண்பாடோடு அன்பூறும் அருளோடு வாழ்ந்து வந்த நான்......உன்மத்தம்பிடித்த உன்னோடு ஆயிரம் ஆயிரம் பேர் சேர்ந்து எதிர்த்தாலும் அடங்கியிருக்க முடியாது !

அக்நியு :—......ம்......ம்......! உன் நிலை மறந்து துள்ளாதே !

பெ. மருது:—துள்ளிப் பாயும் வேலை அடக்கி விட்டோம் என்று இறுமாப்புக் கொள்ளாதே !

அக்நியு :—நான் நினைத்தால் உன்னைச் சுட்டுப் பொசுக்கி விடுவேன்......

**பெ. மருது :**—கூண்டிலிருக்கும் சிங்கத்திடம் வீரம் பேசும் வீணனே! என் கட்டுக்களை அவிழ்த்து விட்டுப் பார்......! வாள் கூட வேண்டாம்...... எத்தனை எத்தனையோ வேங்கைகளை வீழ்த்திய என் கரங்களே எனக்குப் போதும்......! ஊர்பேர் தெரியாமல் வந்து இங்கே வீண் ஆரவாரம் செய்யும் உன் நெஞ்சத்தைப் பிளந்துவிடுவேன்; உன் இரத்தத்தை அள்ளிக் குடித்து என் சுதந்திர தாகத்தைத் தணித்துக் கொள்வேன்...!

**அக்நியு:**—நிறுத்து. உன் மிரட்டல்களுக்கு இங்கு யாரும் பயப்பட மாட்டார்கள். கம்பெனி சட்டப்படி நீ குற்றவாளி....என்ன சமாதானம் கூறுகிறாய்....?

**பெ. மருது :**—தமிழ் மண்ணிலே பிறந்த நாங்கள்தான் தமிழகத்தை ஆளும் உரிமையுடையவர்கள். வானூர்ந்த பொதியின் மிசை வளர்கின்ற செந்தமிழும்...... தேனூர்ந்த மது மலர்ச் சோலையில் தெவிட்டாத அதன் மணமும் எங்களுக்கே சொந்தம்! விண்ணோடும் முகிலோடும் விளையாடும் எங்கள் வீரமும் பண்பாடும் உலகோடு ஒளிவீசும் எங்கள் புகழும் எங்களுக்கே சொந்தம்! அந்நியர் யாரும் தலையிட நாங்கள் இடந்தர மாட்டோம்......!

**அக்நியு :**—கட்டபொம்மன்கூட இப்படித்தான் கர்ச்சித்தான்; ஆனால், அவனைப் புதைத்த இடத்தில் இப்போது புல்கூட முளைத்துவிட்டது!

**பெ. மருது :**—புல்லனே! முளைத்து வந்த அந்தப் புல் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் ஆயிரம் வீரர்கள்

கொதித் தெழுந்துள்ளனர் நாட்டில்! குறித்துக் கொள், அதை!

**அக்நியு :**—வீண் கதை வேண்டாம். நீங்கள் செய்த அக்கிரமச் செயல்களுக்கும் ஆணவமான நடத்தைகளுக்கும் உனக்கும் உன் தம்பி சின்ன மருது என்பவருக்கும் பாஞ்சாலங் குறிச்சி ஊமைத்துரைக்கும் நீதிதேவன்மீது பாரத்தைப் போட்டு மரண தண்டனை விதிக்கிறேன்!

**பெ. மருது :**—எதிர்பார்த்த தண்டனைதான்! சூதுமதியினரின் சொற்களில் சொக்கிப் போனவர்களுக்கு மத்தியில், விசாரணை என்னும் போர்வையால் நீதியை மறைத்துக் கொண்டு இதை விட வேறென்ன தீர்ப்பை எதிர்பார்க்க முடியும்?

**அக்நியு :**—உன் கடைசி ஆசை என்ன...?

**பெ. மருது :**—இமயத்திலே தலைவைத்துக் குமரியிலே கால் நீட்டிப் படுத்திருக்கும் எழில் மிகு தமிழன்னை, இளந் தமிழர்களின் இதயங்களிலே எழுந்து நின்று, பேரரசு நூற்பெரு மக்கள் சூழ்ந்தேத்தப் பாரரசு செய்த பழைய நிலைக்கு வர வேண்டும்...! அந்நியன் ஆதிக்கம் அழிந்து எங்கள் தாய்த்திருநாடு தலை நிமிர்ந்து நிற்கும் பொற்காலம் வர வேண்டும்! ஆகாயமளாவிய கம்பத்தில் தாயின் மணிக்கொடி பட்டொளி வீசிப் பறக்க வேண்டும்......! தமிழர் தமிழராய் வாழவேண்டும்......! தமிழகம் தமிழகமாய்த் திகழவேண்டும்......!!

**அக்நியு :**—இழுத்துக் கொண்டு போங்கள் இவனை, தூக்குமேடைக்கு!

[வீர அரசன் மருதேந்திரன் இழுத்துச் செல்லப்படுகிறான். கர்னல் அக்நியு தீர்ப்பைப் படிக்கிறான்...]

அக்நியு :—சிவகங்கையை ஆண்டுவந்த பெரிய மருது என்று அழைக்கப்படும் வெள்ளை மருதுவும், அவன் சகோதரன் சின்ன மருதுவும் கம்பெனிக்கு விரோதமாக நடந்து கொண்டதால் அவர்களுக்கும்... கம்பெனி ஆட்சிக்கு எத்தனையோ நன்மைகள் செய்திருந்தும் கடைசி நேரத்தில் கம்பெனியாரின் சந்தேகத்திற்கு இடமாக நடந்து கொண்டதால் கறுத்தானுக்கும் மரண தண்டனை விதிக்கிறேன். பெரிய மருது, சின்ன மருது, கறுத்தான் ஆகிய மூவரும் ஒரே நாளில் திருப்பத்தூரிலேயே தூக்கிலேற்றப் படுவார்கள். சிறையிலிருந்து தப்பிச் சென்று நாட்டில் பலவிதமான குழப்பத்தை உண்டாக்கிய ஊமைத்துரை பாஞ்சாலங் குறிச்சிக்கு அழைத்துச் செல்லப்பட்டு அங்குத் தூக்கிலேற்ற உத்தரவிடுகிறேன்.

[ஒவ்வொருவரும் விலங்குடன் அழைத்துச் செல்லப்படுகின்றனர்.]

மற்றும், சின்ன மருதுவின் மகன் சிவஞானம், பதினைந்து வயதுள்ள சிறுவன் துரைசாமி உள்பட எழுபத்தைந்து மறவர்களை நாடு கடத்தித் தீவாந்திர தண்டனை விதிக்கிறேன்.

[பிடிபட்ட விடுதலை வீரர்கள் பாதுகாப்புடன் அழைத்துச் செல்லப்படுகின்றனர்.]

கடைசியாக, எங்களுக்குப் பலவகைகளிலும் ஒத்துழைத்த பெருமைக்குரிய நண்பர்கள் புதுக் கோட்டை தொண்டைமான், எட்டயபுரத்தார் ஆகியவர்களுக்கு மேன்மை தங்கிய கவர்னர்பிரான் சார்பாக நன்றியையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொள்கிறேன் !

[எழுந்து செல்கிறான் ; தொண்டை மான் முதலியோர் முகங்கள் மாறுபட்டுக் காணப்படுகின்றன. மன்றம் கலைகிறது.]

— திரை —

## காட்சி 46 (அ)

திருப்பத்தூர்
தூக்குமேடை

[சந்தர்ப்பத்திற்கு ஏற்பப் பின்னணி இசை கூட்டியும் குறைத்தும் முழக்கியும் உழக்கியும் இசைக்கப்படுகிறது. முதன் முதலில் கறுத்தானை மேடைக்கு இழுத்து வந்து அவனைத் தூக்கில் ஏற்றுகின்றனர். தூக்கில் தொங்கும் அவன் பிணம் 'நிழற் காட்சியில்' காட்டி அகற்றப்படுகிறது. மக்கள் இதயத்தில் திகிலை மூட்டும் பயங் கர அமைதி......! அதனிடையே......

மருதிருவரை அழைத்து வந்து தூக்கு மேடையில் ஏற்றி நிறுத்துகின்றனர்.

இருவரும், மரக்கிளையிலிருந்து ஊசலாடும் சுருக்குக் கயிற்றைத் தாங்களாகவே தங்கள் கழுத்தில் மாட்டிக் கொள்கின்றனர். பின்னணி இசை படிப்படியாக உயர்ந்து பயங்கர இரைச்சலுடன் நிறுத்தப்படுகிறது.]

— திரை —

## காட்சி 46 (ஆ)

— நிழற்காட்சியில் —

[ஒரே அமைதி......! வீணர்களின் சர்வாதிகார வெறிக்குப் பலியான மருதேந்திரர் இருவரின் வீரத் திருவுருவங்களும் தூக்கில் தொங்கிக் காற்றில் மெல்ல அசைகின்றன. தீயவர் முதல் தூயவர் ஈறாக அத்தனைப் பேரும் தலை தாழ்த்தி இருபெரும் விடுதலை வீரர்கட்கும் தங்கள் இறுதி அஞ்சலியைச் செலுத்துகின்றனர். 'விண்ணும் மண்ணும் வெற்றிப் பண் இசைத்த, எம் அருமைத் தலைவர்களே... வாழ்க... வாழ்க......' என்ற பின்னணிக் குரல் வானைப் பிளந்து, இளந்தமிழர்களின் இதயங்களில் எதிரொலிக்கிறது.]

— முற்றிற்று —